# இருடியப்பட்டிக்

# குருநாதர் பிள்ளைத்தமிழ்


ஆக்கியோன் :

சற்குருநாததாசன்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

இலக்கியப் பதிப்பகம்

32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.



# இருடியர்பட்டிக்
# குருநாதர் பிள்ளைத்தமிழ்



## ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

'இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ்' ஆகிய இந்நூல், பாட்டுடைத் தலைவராகிய சற்குரு நாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் திரு அவதாரத் திருநாள் விழாவில் (விரோதிகிருது ஆண்டு புரட்டாசி இரேவதி நன்னாளாகிய 5—10—1971-ல்) இரெட்டியப்பட்டி சந்நிதியில், திருவிசலூர் உயர்திரு G. சரவணப்பிள்ளை அவர்கள் தலைமையில், திருக்கோயில் திருப்பணிச் செயலர்-சென்னை-உயர்திரு K. சாம்பசிவ அய்யர் அவர்களால் வெளியிடப்பெற்றது.

வெளியிடுவோர் :

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்

32. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.



# இருடியர்பட்டிக்
# குருநாதர் பிள்ளைத்தமிழ்



ஆக்கியோன் :
சற்குருதாசன்



விரோதிகிருது புரட்டாசி 20 (5—10—1971) இரேவதி
நன்னாளில் சுவாமிகளின் திருஅவதாரத் திருநாள்
விழாவில் இரெட்டியப்பட்டியில்
சுவாமிகள் சந்நிதியில்

வெளியிடுவோர் :
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்
32. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.

பதிப்பக வெளியீடு எண்—1

முதற் பதிப்பு : 5—10—1971

பிரதிகள் : 2000

## சமர்ப்பணம்

எந்தை குருநாதருக்கு நின்றருள் காட்டிய பரிபூரணப் பெருமான் திருவடிகளில் இச் சிறு நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

—சற்குருதாசன்

விலை

| | ரூ.பை. | | ரூ.பை. |
| --- | --- | --- | --- |
| வல்லட்டைப் பிரதி | 1-60 | மெல்லட்டைப் பிரதி | 1-10 |
| ,, 10 பிரதிகள் | 15-00 | ,, 10 பிரதிகள் | 10-00 |



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
அருள் சக்தி விலாஸ்

பிள்ளையார் குப்பம்
கிருமாம்பாக்கம் தபால்
மஞ்சகுப்பம் வழி
விரோதிகிருது ஸூ
ஆவணிமீ 4 உ
20—8—1971

இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூல் ஆண்டவரைக் குழந்தை யாகப் பாவித்துப் போற்றும் முறையில் அமைந்துள்ளது. அடியவர் அன்பர் அனை வரும் இதனைப் போற்றிப் பயின்று, எல் லாம் வல்ல ஸ்ரீ ஆண்டவரின் அருளை மேன்மேலும் பெற்று உய்வார்களாக.

திருவருள்
ஸ்ரீ அருள்சக்தி தாய்

# பதிப்புரை

'ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்' ஆண்டவர் அருளின் ஆக்குவிப்பு. 12-4-1971 மாலை அடியேனும், B. Sc., பரீட்சையில் தேறி M. A. வகுப்பில் பயின்று வரும் என் அன்பார்ந்த நண்பர் திரு. V. குருநாதன் அவர்களும் விநாயகப் பெருமான் கோயிலுக்குச் சென்றிருந்தோம். பல செய்திகளைப் பற்றிப்பேசி, ஆராய்ந்து வருகையில், அடிமையின் உள்ளத்தில் திருவருளால் ஒரு தூய எண்ணம் திடீர் எனத் தோன்றியது. அது, ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் மீது, பாலகவி திரு. M. K. வேங்கடராமன் அவர்கள் இயற்றியுள்ள பிள்ளைத்தமிழின் அருமை பெருமைகளைப் பற்றியதேயாகும். அதைப் பற்றி நண்பர் V. குருநாதன் அவர்கள் அடிமைக்கு விளக்கியபோது, அடிமை ஒரு சில நேரம், தன்னை மறந்த நிலையில் இருந்தது. பிறகு, இந்த அரிய கவிதை நூலை அச்சிட்டால், அடியார்கள் அனைவரும் ஓதி உளம் மகிழ்வார்களே! என்றும், அதோடு பிற தமிழறிஞர்களும் இவ்இலக்கியத்தைப் படித்து மகிழவும் வாய்ப்பாக இருக்குமே! என்றும் கருத்தோடிற்று. இந்த அவா மிகுதியினால், திரு. R. பாலகுரு அவர்களையும், திரு, K. வெங்கடேசன் B. A., அவர்களையும் கலந்து பேசி, இதனை அச்சிட எண்ணினேம்.

இந்நூலை அச்சிடுவதால், இதுபோன்று ஆண்டவர் பற்றிய பல அருள் நூல்களை ஆக்குவதற்கு திரு. பாலகவி அவர்களுக்கும், பிறருக்கும் ஊக்கம் பெருகுமே என்னும் எண்ணமும் வளர்ந்தது. என் தந்தையாராகிய திரு. T. ஜெகநாத குப்தா அவர்களிடம் இச்செய்தியைச் சொல்லிக் கலந்து ஆலோசித்தோம். ஒரு தனி நிறுவனம் அமைத்தால், அருள் நூல்களை வெளியிடுவதோடு, ஆண்டவரின் அருட் சட்டத்தைப் பலரும் அறிய **விளம்பிடுதற்கும்** வாய்ப்பாக இருக்குமே என்னும் சிந்தனை ஆண்டவர் அருளால் அவர் உள்ளத்தில் தோன்றலாயிற்று.

இச்சிந்தனையின் விளைவே ஸ்ரீ இரெட்டியபட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம் ஆகும். சுவாமிகளின் தலைசிறந்த அடியவரும், இன்று, சுவாமிகளின் நிலையில் இருந்து, சட்ட நெறியில் வழிகாட்டி வரும் கருணைத்தாயுமாகிய பிள்ளையார் குப்பம் **திருவார் திரு அருள் சக்தி அன்னையார் அவர்களின்** திருச்சந்நிதிக்கு அடிமையின் தந்தையும் பதிப்பகத்தின் அமைப்பாளருமாகிய திரு. T. ஜெகநாத குப்தா அவர்கள் 1-5-71-ல் சென்று, திருவார் திரு அன்னையார் அவர்களின் அருளாசியைப் பதிப்பகத் துவக்கத்திற்காகப் பெற்றுக் கொண்டு வந்தபின், 16-5-71-ல் இப்பதிப்பகத்தை உயர்திரு-R. சண்முகசிகாமணி M. A. (தற்போது I. A. S.) அவர்களது தலைமையில், ஆட்சிமொழித் தனி அலுவலர் அருள் திரு. கீ. இராமலிங்கனார் M. A., அவர்கள் துவக்கி வைத்தார்கள். அருட்கவி மணி தவத்திரு. சாதுராம் சுவாமி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். அடிமையின் சிறு ஆசையை நிறைவேற்றி வைத்த இச்சான்றோர்களுக்கு அடிமை கூப்பிய கரங்களுடன் வணக்கத்தையும் நன்றியையும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பதிப்பகத்தின் சார்பில் மாதந்தொறும், சென்னையின் பேட்டைகளுள் ஒன்றில், ஆண்டவர் வரலாறும், அருட்சட்டமும் பற்றிச் சொற்பொழிவுகள் நடந்து வருகின்றன. 15-8-71-ல் கோவையிலும் ஒரு சிறப்புக் கூட்டம் நடந்தது. இக்கூட்டங்களில் தலைமை தாங்கினோர், அருளுரை வழங்கினோர், பதிப்பகத்தின் ஆண்டு உறுப்பினர், ஆயுள் உறுப்பினர், புரவலர், நன்கொடையாளர் என்ற முறையில் கலந்து கொண்டு உதவுவோர் அனைவர்க்கும் பதிப்பகத்தின் சார்பில் இவ்வடிமையின் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

**'இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத் தமிழ்'** பதிப்பகத்தின் அமைப்பிற்கே மூலவித்தாக நின்று தோற்றுவித்த காரணத்தினால், பதிப்பக முதல் வெளியீடாக இந்நூலையே வெளியிட வேண்டும் என அனைவரும் கோரலாயினர். ஆகையால் இந்நூல், குருநாதர் தோன்றியருளிய நன்னாளாகிய புரட்டாசி இரேவதியில், இருடியர்பட்டியில் குருபரரின் திருச்சந்நிதியில் வெளியாகின்றது.

இந்நூலாசிரியர் பாலகவி திரு. M. K. வேங்கடராமன் அவர்களுடைய பெருமையை அனைவரும் உணர்வர். சட்டத்தில் சிறந்த அடியவராக இருந்து கொண்டே, பல பெரியோர்கள் சட்டத்தில் சேர, நல்லுரைகள் பலவற்றைச் சொல்லிச் சேர்த்த பெருமையும் இவர்க்கு உரியது; இந்தப் பட்டியலில் அடிமையும் ஒன்று என மிகத்தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். பலநாள் இவருடனே அடிமை இருப்பினும், திருவார்திரு அருள்ஞானச் செல்வத்தாய் அவர்களின் மூலம் இவருடைய பெருமைகளை உணர்ந்து, பலநாள் அடிமையும், அடிமையைச் சேர்ந்த சிலரும் அழுது ஓய்ந்த பாடில்லை. குடத்தில் இருக்கும் விளக்கைக் குன்றின் மேல் வைக்க வேண்டும் என அடிமை எண்ணியது. சற்குரு கருணையால் அடியார்கள் அனைவரும் இவ்எண்ணத்தை நிறைவேற்றினோம்.

எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி, இந்நூலுக்கு முன்னுரை, அணிந்துரை, மதிப்புரை, சாற்றுக்கவி, வாழ்த்து ஆதிய அனைத்தும் மனமுவந்து வழங்கியருளிய அன்பின் பெரியார் அனைவர்க்கும், இந்நூலை நல்ல முறையில், குறைந்த காலத்தில் அச்சிட்டுதவிய 'சூப்பர் பவர் அச்சகத்'தினர்க்கும் பதிப்பகத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆண்டவரின் அருளில் நாட்டமுடைய அடியார்கள்' அன்பர்கள் அனைவரும் இந்நூலைப் பெற்றுப்போற்றிப் படித்து, அருட்பயன் அடைய வேண்டும் என்னும் இப்பதிப்பகத்தின் கோரிக்கையைப் பணிவுடன் விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

அடிமை
**T. J. குபேந்திரன்**
கௌரவச் செயலாளர்
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்
1—10—1971

அடியார்கள் இல்லம்,
தொலைபேசி எண். 34600
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை-1.

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# அணிந்துரை

['அருட்கவி மணி' உயர் தவத்திரு ஸாதுராம் சுவாமிகள்
ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம், வட திருமுல்லை வாயில்,
சென்னை-62.]

'பிள்ளைத்தமிழ்' என்பது 96 வகைத் தமிழ்ப் ப்ரபந்தங்களுள் ஒன்று. இது, ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் 10. ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களைக் கீழ்க் கண்ட வெண்பா விளக்கும்.

*சாற்றரிய காப்புசெங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே ஆய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரொடும் பத்து"

---

*1. **காப்பு:** குழந்தை பிறந்த மூன்றும் மாதத்தில் அக் குழந்தையைக் காக்கும்படியாகக் கடவுள் அருளை வேண்டுவது காப்புப் பருவம்.

2. **செங்கீரை:** ஐந்தாம் மாதத்தில் குழந்தை மழலை மொழிகளைப் பேசும். [செம்—செம்மையான, கீர்—(மழலைச்) சொல்.] மேலும் ஒரு காலை மடக்கி, ஒரு காலை நீட்டி, இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்ந்து முகத்தை அசைத்து ஆடும். இப் பருவத்தைச் செங்கீரைப் பருவம் என்பர். இளங் கீரைத்தண்டின் நுனி ஆடுவதுபோல் குழந்தையும் தலையை ஆட்டுதலினாலும் செங்கீரை எனப்பட்டது எனவும் கூறுவர்.

3. **தால்:** தாய் சேயைத் தொட்டிலில் இட்டுக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து பாடலைப் பாடி ஆட்டும் பருவம் இது. ஏழாம் மாதத்தில் நிகழ்வது. (தால்—நாக்கு). நாவசைத்துப் பாடுதலின் இப்பருவம் தாலப் பருவம் எனப்பட்டது. குழந்தையே நாவை அசைத்துப் பேசத் தொடங்கும் பருவம் என்றும் கொள்ளலாம்.

4. **ஸப்பாணி:** ஸ:+பாணி. பாணி — கை. 'ஸ' என்பது 'கூடிய' என்று பொருள்படும் வடமொழிச் சொல். இரு கைகளையும் கூட்டிச் சேர்த்துக் கொட்டிக் குழந்தை மகிழும் பருவம் இது. ஒன்பதாம் மாதத்தில் நிகழ்வது.

காப்பு, செங்கீரை, தால், ஸப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, அம்மானை, நீராடல், பொன்னூசல் என்னும் 10 பருவங்களும் பெண்பாற் பிள்ளைத் தமிழ்க்கு உரியன. ஷ பிள்ளைப்

---

**5. முத்தம்:** வாயினால் முத்தம் தருமாறு குழந்தையை வேண்டும் பருவம் இது. பதினொன்றும் மாதத்தில் நிகழ்வது.

**6. வருகை:** தளர்நடையிட்டு நடக்கத் தொடங்கிய குழந்தையை 'வருக வருக' என்று அழைப்பது வருகைப் பருவமாம். இது வாரானைப் பருவம் என்றும் கூறப்பெறும். இதற்குரிய காலம் 12-ஆம் மாதமாம்.

**7. அம்புலி:** அம்புலி—சந்த்ரன். பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வரும்படிச் சந்த்ரனை அழைப்பது இப்பருவ நிகழ்ச்சி. 18-ஆம் மாதம் இதற்குரிய காலம். அம்புலியை, அழைக்கும்போது சந்த்ரனுக்கும் குழந்தைக்கும் ஒப்புமை கூறுதல் ஸாமம். சந்த்ரனின் குறைகளைக் கூறிக் குழந்தையின் மேன்மையை உரைப்பது பேதம். குழந்தையுடன் விளையாட வருவதனால் அம்புலி பெறும் பயனைக் கூறுவது தானம். விளையாட வாராவிடில் வரும் தண்டனையை உரைப்பது **தண்டம்.**

**8. சிற்றில்:** சிறு—சிறிய, இல்—(மணல்) வீடு. சிறு பெண்கள் மணலில் சிறு வீடுகள் கட்டி விளையாடும்போது 'தாம் முயன்று கட்டிய மணல் வீடுகளைச் சிதைக்க வேண்டா' என்று பாட்டுடைத் தலைவனும் ஆண் குழந்தையை வேண்டுவது சிற்றிற் பருவமாம். இஃது இரண்டாம் ஆண்டில் நிகழ்வதாகும். [ஜீவாத்மாவாம் பெண்ணின் சிற்றிலாகிய உடம்பைச் சிதைக்காமல் (மரணத்துக்கு உள்ளாக்காமல்) காத்தருளுமாறு இறைவனை வேண்டுதல் என்பது தத்துவம்.]

**9. சிறுபறை:** இது சிறு பறை கொட்டிக் குழந்தை விளையாடும் பருவம். மூன்றும் ஆண்டு இதற்குரிய காலம். (சிற்றிற் பருவம் மூன்றும் ஆண்டில் நிகழ்வது எனவும். சிறுபறைப் பருவம் இரண்டாம் ஆண்டில் நடப்பது எனவும் மாற்றிக் கூறுதலும் உண்டு.)

**10. சிறுதேர்:** சிறியதேரை உருட்டி விளையாடும்படிக் குழந்தையைத் தாய்மார் வேண்டும் பருவம் இது. நான்காம் ஆண்டில் நிகழ்வது.

பருவங்களை, முறையே 3, 5, 7, 9, 11, 13, 15, 17, 19, 21 ஆம் மாதங்களில் கூறுதல் எனவும், 3, 5, 7 வருடங்கள் வரையில் கூறுதல் எனவும் இரண்டு படச் சொல்வர். பருவ காலங்கள் வெவ்வேருகப் பலபடக் கூறப்படுகின்றன என்ருலும், கீழ்க்கண்ட பிங்கலந்தைச் சூத்திரம் அவற்றை ஓரளவு தெளிவு பெறத் தெரிவிக்கிறது. தற்காலத்தில் இதுவே வழக்கில் உள்ளது என்பது அறிஞர்கள் கொள்கை.

''பிள்ளைப் பாட்டுத் தெள்ளிதின் கிளப்பின்
திங்கள் இரண்டில் தெய்வம் காக்கென
இன்தமிழ்ப் புலவர் இயம்பிய காப்பும்
ஐந்தாம் திங்களில் செங்கீரை ஆடலும்,
ஆரும் திங்களில் கூறுதல் கற்றலோ(டு)
ஏழாம் திங்களில் இன்னமு தூட்டலும்,
எட்டாம் திங்களில் இயல்தா லாட்டலும்,
ஒன்பதாம் திங்களில் உயர்ஸப் பாணியும்,
பத்திஞே டொன்றில் முத்தம் கூறலும்,
ஆண்டு வரையில் ஈண்டுவரு கென்றலும்
மதிஈ ரொன்பதில் மதியை அழைத்தலும்,
இரண்டாம் ஆண்டில் சிறுபறை கொட்டலும்,
மூன்ரும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்,
நான்காம் ஆண்டில் சிறுதேர் உருட்டலும்,
பத்தில் பூண்அணி, பன்னீ ராண்டினில்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதல் என்(று)
இன்னவை பிறவும் ஆகும் இவற்றுள்
முன்னர் மொழிந்த ஒழிந்தவற் ருேடும்
பெற்ற ஆண்பாற் பிள்ளைப் பாட்டாம்;
முன்னுறக் கிளந்த ஆண்டில் நால்வரை
இசைத்த பாடல் இருபாற்கும் உரியதே''.

பருவத்துக்குப் பத்துப் பாடல்கள் வீதம் பத்துப் பருவத்துக்கு 100 பாக்களாக விருத்த இலக்கணத்திற் பாடப் பெறும் பிள்ளைக்கவித் தமிழ்நூல் பாட்டுடைத் தலைவனுக ஒரு தெய்வத்தையோ, மஹானையோ, அரசனையோ, வள்

ளலேயோ கொள்ளுதல் மரபு. அம்முறையில், 'வழி காட்டும் வான்பொரு'ளான இருடியர்பட்டி அடிகளாரைப் பாட்டுடைத் தலைவனுக் கொண்டு, பிள்ளைபோற் பாவித்துப் பாடப் பெற் றுள்ளதே இத் துதிநூல். இந் நூலின்கண் காணப் பெறும் அருள் நயம், பொருள் நயம், நடை நயம், தொடை நயம், இலக்கண நயம், இலக்கிய நயம், பக்தி நயம், யுக்தி நயம், மொழி நயம், எழில் நயம் அனைத்துக்கும் இருடிப்பட்டிக் குருவருள் பெற்ற திருவருளாளர் பாலகவி வேங்கடராமச் செட்டியாரே காரணம். அவர் (பாலகவி) பிள்ளைக்கவி. அவர் பாடலும் (பாலகவி) பிள்ளைக்கவி. இந் நன்னூலை முதன் முதலாக, முதன் முறையாக அச்சிட்டு வெளியிடும் "இருடியர்பட்டி ஸ்வாமிகள் இலக்கியப் பதிப்பகத்தார்" இப் பிள்ளைத்தமிழ் நூல் போலப் பருவத்தால் வளர்ந்து, உருவத்தால் செழித்துச் சிறந்து பல்லாண்டு வாழ எல்லாம் வல்ல ஸ்ரீ வைஷ்ணவி தேவியின் திருவடித் தாமரைகளைப் பலகாலும் வாழ்த்துகின்றேன்.

ஸ்வாமி ஸாதுராம்

தங்கல் :
ஓம் ஸித்தாச்ரமம்,
ஸ்ரீ வைஷ்ணவி எஸ்டேட்,
கல்லட்டி அஞ்சல்,
உதகமண்டலம் வழி.
நீலகிரி
(வ்யாஸ பௌர்ணமி,.8—7—1971)

உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

## சாற்றுக் கவி

[பதினான்குசீர்க் கழிநெடில் ஆசிரியர் விருத்தம்]

1. பிள்ளைவே ளாளமர பினிலிருடி யார்பட்டி
பேசுபுகழ் வீர பத்ரப்
பிள்ளைஆ வுடையம்மை பிள்ளையாப் போந்தஸுப்
பிரமணிப் பிள்ளை யவர்மேல்
பிள்ளைத் தமிழ்க்கவிகள் வெள்ளையுள் ளத்தன்பு
பெருகஒரு நூறு பாடிப்
பெரிதீந்து ளாரிருடி நகரில்வளர் குருநாதர்
பிள்ளைத் தமிழ்ப் பெயரிலே
கொள்ளைகொளும் உள்ளத்தை அள்ளியிக் கவிதைநூல்
கோத்தளித் தாரெவ ரெனிற்
கூறுவாம் அவர்பால கவியென்ற பட்டமுற்
கொண்டவேங் கடராம னார்
பிள்ளைப் பிராயமுத லாக்குரவர் பெருமையே
பேசுஸற் குருதாஸ னார்
பின்னுமவ ரிந்நூல் அரங்கேற்றி னார்தவப்
பெருமங்கை யர்க்கரசி யார்

2. கச்சிமா நகரிலிரு டிப்பட்டி மாக்குரு
கழற் கமலம் வழிபாடு செய்
கருணையருள் ஞானமாச் செல்வச்ச நிதியின்
கணே விரோ திக்கிருது வில்
இச்சிமா தம்பெயர் வைகாசியிற் பன்னிரண்
டேய்திகதி புதனாளினுக்
கேற்பக் கிறித்துஎனும் ஏசுவா னவர் பிறந்
திட்டபின் பெண்ணப் படும்
பச்சிமா சாநாட்டி னோர் கணித முறையினிற்
பகருமீ ராயிரத்திற்
பத்தொன்ப தோடொருபதுங்கழித் திட்டஎண்
பயிலாண்டு மேமதியினில்
நச்சிமா னவர்கணக் கிடுமிருப தோடாறு
நவில்திகதி நன்னாளி னில்
நல்லவர் பெரும்புலவர் எல்லவரும் மெச்சுற
நயந்த அவர் தொண்டு வாழி

காஞ்சிபுரம்,
26-5-71 புதன்.

—ஸாதுராம்

# வாழ்த்து

[அறுசீரடி ஆசிரிய விருத்தம்]

இருடியர் பட்டிச்சுவாமி
இனியபின் ளைத்தமிழ் வாழ்க!
வருடியன் ளுர்கழல் வாழ்த்தும்
வைசியர் பால கவிப்பேர்த்
தெருடிகழ் 'வேங்கட ராமச்
செட்டியார்' யாத்தவர் வாழ்க!!
இருடியர் பட்டியெம் அடிகள்
இலக்கியப் பதிப்பகம் வாழ்க!!!

Om Siddhasram
Sri Vaishnavi Estate
Kalhatty, P. O.
(Via) Ooty, Nilgiris.

SADHURAM SWAMI
20-7-71.

---

## 'கலைமகள்' ஆசிரியர், 'வாகீசகலாநிதி' உயர்திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் வழங்கிய

# வாழ்த்து

இருடியர் பட்டி இலங்கும் அடிகள்
இரும்புகழெல் லாந்தேற ஈந்தான்—பொருள்மலியும்
கோலப்பிள் ளைத்தமிழ்ச்சொற் கோவேங் கடராம
பாலகவி, வாழி பணைத்து.

'காந்தமலை'
7, நார்ட்டன் முதல் தெரு,
சென்னை-28.

கி. வா. ஜகந்நாதன்
22—9—71

## முன்னுரை

['செந்தமிழ் விளக்க வள்ளலார்; 'ஆட்சிச்சொற் காவலர்' உயர்அருள்திரு. கீ. இராமலிங்கனுர் எம். ஏ., அவர்கள்]

**'இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத் தமிழ்'** என்னும் கவிதை நூல் மிகவும் அழகிதாக அமைந்துள்ளது. படிப்பதற்கு இன்னேசை பயப்பதாய், எளிமையுடையதாய், விழுமிய பொருள் பொதிந்ததாய் விளங்கி மகிழ்விக்கின்றது. கொண்டு கூட்டிப் பொருள் செய்வதற்கு இடர்ப்பட வேண்டிய தேவையேயில்லை. இனியனவும், பொருத்தமுள்ளனவுமான சொற்கள், இடம் அறிந்து நிகழ்ந்து இன்பம் பயக்கின்றன. தொண்ணூற்ருறு வகையினவாம் சிற்றிலக்கியங்களில் ஒன்ருன 'பிள்ளைத் தமிழ்'த் தொகுதி இக் குருநாதர் பிள்ளைத்தமிழ்ப் பனுவலால் ஒரு சிறந்திலங்கு கவிதையைப் பெற்றுச் செம்மாப்பு அடைவதாகின்றது.

இந் நூலாசிரியர் அவர்கள், தங்கள் பிள்ளைப் பருவத்திலிருந்தே கவிபாடும் அருந்திறல் வாய்ந்தவர்கள். எனவே தங்கள் இயற்பெயராம் 'வேங்கடராமன்' என்பதோடு 'பாலகவி' என்னும் பாங்குசால் பட்டத்தை அறிஞர்களால் அளிக்கப்பெற்றவர்கள். இளமை முதல் இத்துணையாண்டுகளாக இவர்கள் பாடிப்பாடிப் பூண்ட பாவளமை இந்நூலில் இனிது மிளிரக் காணலாம். இதுகாறும் தங்கள் இயற்பெயர் கொண்டு கவிதைகள் புனைந்து வந்த இவர்கள், தங்கள் குருநாதராம் இரெட்டியப்பட்டி அடிகளாரின் சேவடிகளில் தங்களை அடியோடு அடைக்கலப்படுத்திக் கொண்ட நிலையில் பாடியுள்ள இப் பிள்ளைத்தமிழ் நூலில், ஆசிரியர் பெயரை 'சற்குருதாசன்' என மாற்றிக் கொண்டிருப்பது இவர்கள் ஆண்டவன் அடிகளில் இதுபோது முழுமையாக அடைக்கலம் பூண்டுள்ள அன்பின் மாண்பினை உணர்த்துவதாகும்.

குருநாதர் தோன்றியருளிய சிற்றூர்க்கு 'இரெட்டியப்பட்டி' என்பதே இன்றும் வழங்கிவரும் பெயராகுமாஞலும், அருட்கவி சேதுராம் (இப்போது தவத்திரு. சாதுராம் அடிகளார்) அவர்கள் குருநாதர் சந்நிதியில் வழிபட்டு நின்றபோது,

அன்பருளால் அகத்திலிருந்து இயல்பாக ஊற்றெடுத்து வெளிவந்த பாடல்களில், இவ்வூர் '**இருடியர்பட்டி**' என்றே பொருந்திவிட்டிருப்பதால், இந் நூலுள் அத் திருப்பெயரே 'இருடியர்பட்டி', 'இருடிப்பட்டி,' 'இருடிப்பதி,' 'இருடி நகர்,' இருடிநன்நகர்,' 'திருஇருடிநகர்' என்றெல்லாம் குறிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். இருஷிகள் தவ மாற்றிய வனப்பகுதியாக இவ்வூர் முன்னொரு காலத்தில் இருந்திருக்கவேண்டும் என்பதே புலனுகின்றது. இன்று இல்லாதது போன்று, என்றுமே இவ் வூரில் இரெட்டியார் இனப் பெருமக்கள் வாழ்ந்திருந்ததாகத் தோன்றவில்லை.

இருடியர்பட்டிக் குருநாதரின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளும், அவர்கள் அருளிய சட்டமாகிய நல்வாழ்வுத் திட்டத்தின் பெருமைகளும், அடியாராவதற்கு உரியவர் களைத் தேடிக் கண்டு அவர்களைச் சட்டத்தில் நிறுத்தி, உய் விக்கும் குருநாதரின் ஈடிலாப் பேரருளும் இந்நூலுள், அழகு அழகாக எடுத்து ஓதப்பெற்றுள்ளன. சில தொடர்களை யாவது தொட்டுச் சுவைப்போம்.

'செவ்வியசன் மார்க்கநெறி அறியாமல், உலகினர்
திகைப்புறுதல் கண்டிறை வனின்
திருவருள்ஓர் உருஎய்தி யாங்கு, இருடி நகரில்ஒரு
தேசிகன் உதித்துள் ளனன்'

'மூலை நோக்கிப் பணியும் அறிஞ!
மோன வானை நோக்கியே
முகிழ்கை கூப்பித் தொழுகை புரியும்
முருகு கமழும் உருவனே!

'தமிழ்மதுரை நகரிலே, வைகை தென் கரையிலே
தண்பொதிகை யின்குகையிலே,
மோனநிலை தன்னிலே, மூலஅனல் ஒளியிலே
முத்தமிழ் முழங்கு ஒலியிலே,
மொழிவதற் கரியஅருள் அழகோடு திகழ்பகவ!'

'எங்கு அடியார் ஆவதற் குரியர் உள்ளார்? என்ன
எண்ணி, அங்கங்கு அடைந்து,'......
'என்பும்உரு கும்படி இதம் சொல்லி,
அருள்நெறிக்கு ஈர்ப்பவன்'

'அடியாரை அருளினால் கண்டு,
அம்க(ண்)ணால் மனதினால், செங்கையால் பரிசித்து
அருட்கருணை பாலித்தருள் தினகரன்
' உடல், ஆவி, பொருள், பெற்(று) அருள்திருச்
சட்டம் கொடுத்தருள் பவன் '
' மதசமயம் எல்லாம் இயம்பு பொருளை
இணையிலாத் திருவருள் சட்டம் என்(று)
இனிது அருளும் எம்பிரான் '
'புது யுகம் ஒன்று படைத்திட வந்தவன் '
'பண்புமிகு சமயமதம் எல்லாமும் ஓது அருட்
பயனைத், திரட்டி, எளிதாய்
நவயுகச் சமயம் என, ஒருதிரு அருட்சட்டம்
நல்கு, குரு '
'ஆசார சீலங்கள், ஆகார நியமங்கள்,
அருள் நிட்டை நல்கு குரு'

இவை சிலவே. நூல் முழுதும் இத்தகைய சுவை சான்ற தொடர்கள் பல ஒளி வீசுகின்றன.

இந் நூலினை, இணையிலா வனப்புடன் அமைத்துள்ள இதன் ஆசிரியர் அவர்கள், இதுகாறும் பாடிய பாடல்களில் பெரும்பாலன குருநாதரின் வழிபாட்டுக்கு உரியனவே யாகும். இரெட்டியப்பட்டி குருநாதர் சந்நிதியில் அர்ச்சகரும், எண்ணிலாத இல்லங்கள் தோறும் அடியவர்களும், குரு நாதரின் பூசனைக்குத் துவக்கம் முதல் முடிவு வரை பயன் படுத்தும் மந்திரங்கள் இப் பாடல்களேயாகும். இப்பிள்ளைத் தமிழ் நூலும் குருநாதரைப் போற்றிப் பரவி அருள் பெறுவ தற்கு மிகவும் வாய்ப்பானதாக அமைந்துள்ளது. இலக்கிய நயம் கண்டு இன்புற விரும்பும் அன்பர்களும், இந் நூலை ஓதி உவகை மிகலாம்.

இப் பாலகவி— 'பிள்ளைத் தமிழ்க் கவி'யாக விளங்கும் குருபரரின் சட்ட நெறிச் சீலர்-இன்னும் பலப்பல இன்கவிகள் பாடி, அடியவர்களும் அன்பர்களும் இம்மை மறுமைப் பெரும் பயன் வளரப்பெற வாய்ப்பளித்து வரவேண்டும் என எந்தை குருநாதரின் இணையடிகளை வழுத்துகிறேன்.

" தமிழ் மணம், "
சென்னை—30.

கீ. இராமலிங்கம்,
22—9—1971

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மதிப்புரை

[பிரபந்த வித்வான், உயர் அருள்திரு. கி. வெங்கடசாமி ரெட்டியார் அவர்கள், வி. பூதூர் (அஞ்சல்) (வழி) வளவனூர், விழுப்புரம் R. M. S.]

'இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ்' எனும் இந் நூல், மதிப்புக்குரிய உயர்திரு பாலகவி, வேங்கடராமச் செட்டியார் அவர்களால் இயற்றப் பெற்றது. இந் நூலை நோக்குங்கால், இவ் வாசிரியர் 'பாலகவி' என்பதனிலும் 'முதுபெருங் கவிஞர்' என்பதே பொருத்தம். இவர் தம் குரு நாதர் மீது இந்நூலை இயற்றியுள்ளமையால் இவர்க்குக் குரு நாதர் மீதுள்ள பெரும் பற்று புலனாகின்றது.

இந் நூற் பாடல்கள், செம்பாகமாகவும், பொருள் வளம் உடையனவாகவும், கற்போர்க்குக் கழிபேருவகை தருவன வாகவும் உள்ளன.

'இருடியர்பட்டிக் குருநாதர்' என்று போற்றப் பெறும் இப் பிள்ளைத் தமிழ்ப் பாட்டுடைத் தலைவர், இவ்வுலகோர், இயற்கை நெறி வழுவிச், செயற்கை நெறிதழுவி, நோய் வாய்ப்பட்டுப், பொருளும் அமைதியும் இழந்து வருந்துதல் கண்டு பொறுதாராய்த் தவம் பல புரிந்து பரிபூரணன் அரு ளால், ஒரு சட்டம் வகுத்துத் தந்தருளினர்.

அதன் முறைமை:—அதிகாலைத் துயிலெழல், தண்ணீ ரில் மூழ்கல், இறைவனை வணங்கல், எந்நோய் வரினும் மருந்து கொள்ளாமை, குருநாதர் பால் பேரன்புடைமை எனும் இவைகளை ஒழுங்காகப் பின் பற்றுதலாம். இவைகள் இக்கால நாகரீக மக்கட்கு வியப்பாகத் தோன்றினும் தொன்று தொட்டு வந்த முறையும் ஈதேயாம்.

இச் சட்டத்தினைப் பின்பற்றிப் பல்லாயிர அன்பர்கள் நோயின் நீங்கி அமைதியொடு வாழ்தலை இன்றும் காண்கின் றோம்; இனியும் காண்போம். அவ்வன்பர்கள் அனைவர்க்கும் இந்நூல் ஒரு பெரு வைப்பாகத் திகழும் என்பதில் ஐயமில்லை; ஏன்? தமிழ் உணர்ச்சியுள்ள அனைவர்க்குமே இது பெரு விருந்தாகும்.

குருநாதர் அருளிய சட்டத்தினை இந்நூல் 5, 8, 11, 15, 28, 68 முதலிய பாடல்களால் அறியலாம்.

பிள்ளைத் தமிழ் நூலில் காப்புப் பருவத்தில் முதன் முதலில் திருமாலைக் கூறுதலே மரபு. 'காப்புக்கு முதல் எடுக்கும் கடவுள்தான் மாலேயாகும்' என்பது சூடாமணி நிகண்டு. சேக்கிழார் பிள்ளைத் தமிழில் மட்டும் அதன் ஆசிரியர் அம்மரபை விடுத்து, அடியார்களை மட்டுமே காப்புக் குரியவர்களாகக் கூறியிருக்கின்றார். அதுபோலவே இப் பிள்ளைத் தமிழ் நூலுடையாரும் குருநாதர் கொண்டாடிய பரிபூரண விநாயகரையே காப்புக்குரியவராகப் பத்துப் பாடல்களையும் அமைத்துள்ளார். நூலாசிரியர் கருத்தை ஊன்றி நோக்கின் இதுவும் ஒருவாறு ஏற்றுக் கொள்ளக் கூடியதே.

சப்பாணி என்பது கை கொட்டி ஒலி எழச் செய்தல். ஒலி எழச் செய்தலில் போகின்ற போக்கினின்றும் போகின்றவர்கள் விலக வேண்டும் என்பதைக் குறிக்கக் கைதட்டல் ஒருவகை. மகிழ்ச்சியைப் புலப்படுத்தக் கைதட்டல் ஒருவகை. பாடல் 33-ல்.

'இரு மூன்று பகை விலக இருகைகூட் டிக்கொட்டி
எச்சரிக் கின்றதே போல்
தரும இரு டிப்பட்டி வருபகவ அருளுருவ
சப்பாணி கொட்டியருளே' எனவும்,

பாடல் 39-ல்

' குவலயத் துக்கனுப் பினன்என்ன மகிழ்தல்போல்
கொட்டியருள் சப்பாணியே' எனவும்,

பிறரைத் தம்பால் திருப்பித் தம் கருத்தினைத் தெரிவித்தற்கும் சிறுபறை முழக்குதல் உண்டு. அங்ஙனமே, சிறுபறைப் பருவம் பாடல் 82-ல்

வேண்டிய பொருள்களைக் கொள்விலைக்கே இனிது
விற்றுமகி ழப்போந்த னம்
வியனுலகர் இஃதுணர்ந் திடுகென உணர்த்திட
விளித்திடுதல் போல் அழகுடன்
சேண்டிகழும் அருளொளிச் செம்மைமிக உறுபகவ
சிறுபறை முழக்கி யருளே' எனவும்,

கூறுகின்ற முறையில் தற்குறிப் பேற்ற அணி சிறப்புற அமை தல் காணலாம். ஆங்காங்கு இது போலவே உருவகம், உவமை முதலிய அணிகளும் நூலாசிரியரின் திறனை விளக்கு கின்றன.

41-ஆம் பாடலில் முத்துப் பிறக்கும் இடங்கள் இருபதை யும் தொகுத்துக் கூறுவது போற்றுதற்குரியது. முத்துப் பிறக்கும் இடங்களைக் கூறும் இரத்தினச் சுருக்கப்பாடல்,

" தந்தி வராக மருப்பிப்பி பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம்மின்னுர்
கந்தரம் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிக ர்
இந்து உடும்பு கராமுத்த மீனும் இருபதுமே "

என்பதிலும் முதல் வரியில் கதலிக்கு முன் தனி என்றஅடை மொழி வந்துளது. இந் நாற்பத்தோராம் பாடலில் இவ்விரு பது பொருள்களுள் ஒன்றற்கும் அடைமொழி கொடாமையும், இரத்தினச் சுருக்கப் பாடலில், தந்திவராக மருப்பு என முன் னும் ஆவின்பல் என இடையிலும் கூறியது போலின்றி ஒரு சேர 'ஆவானை பன்றிப்பல்' எனக்கூறியமையும் இந்நூலாசிரி யரின் பல நூற் பயிற்சியினையும், ஆற்ரெழுக்காகக் கவியியற் றும் ஆற்றலையும் விளக்குகின்றன.

இந்நூலை நாடொறும் படிப்பவர் குருநாதர் திருவருளுக்கு ஆளாவர் என்பது உறுதி.

வாழ்க குருநாதர் பிள்ளைத்தமிழ் !
வாழ்க பாலகவி வேங்கடராமன் அவர்கள் !
வாழ்கசீர் அடியார் எல்லாம் !

சுபம்.

வி. பூதூர்
20—9—1971

இங்ஙன்
அன்பு,
**கி. வேங்கடசாமி**

மாசிலா குருபரன் மாண்புசால் அருளினை
காசினி யோர்கள் கண்டு நன்(கு) உணர்ந்திட
தேசுசால் பிள்ளைத் தமிழ் என ஆக்கிய
மாசிலா சற்குரு தாசனும் வாழ்கவே !

# அருட்ப்ரஸாதம்

உலகம் தோன்றிய நாள் முதல் உலகின் பல பாகங்களிலும், பல காலங்களிலும் அருளாளர் பலர் தோன்றி அருள் நெறி கண்டு இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின் பத்தைப் பலரும் பெறவேண்டும் எனக் கருதியுள்ளனர்; முயன்றுள்ளனர்; தம் சிறந்த கருத்துக்களை எழுதி வைத்தும் சென்றுள்ளனர். அவர்கள் அனைவரின் கருத்தும் செயல் முறையில் நிறைவேற, எல்லாம் வல்ல பரம்பொருளின் அருட்பெருங்கருணையே ஒருருத்தாங்கி உலகின் கண் அவதரித்ததைப் போன்று, செந்தமிழ் நாட்டில், திருநெல் வேலி மாவட்டத்தில் கோவில்பட்டிக்கு 28 மைல் தொலை வில் உள்ள நாகலாபுரத்தை அடுத்துள்ள இரெட்டியப்பட்டி* என வழங்கும் இருடியர்பட்டித் திருத்தலத்தில் கி. பி. 1856-ல் நள ஆண்டு புரட்டாசி மாதம் இரேவதி நன்னு ளில் சைவவேளாள மரபில் சுவாமிகள் சுப்ரமண்யம் என்ற பிள்ளையாகத் தோன்றியருளினுர்கள். ஆங்கிருந்த ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் எழுதப் படிக்கக் கற்றுக்கொண் டனர். குலத்தொழிலாகிய விவசாயத்தில் ஈடுபட்டனா. நிலம் பன்மடங்கு விளைவைத் தந்தது. அத்தருணம் அவ்வூர் ஏழை மக்கள் அன்ருட வாழ்க்கைக்குத் தேவையான பொருள் களை அதிக விலை கொடுத்து வாங்குவதைக் கண்டு வருந்தி, தூத்துக்குடிக்கு வண்டி கட்டிச்சென்று, சரக்குகள் வாங்கி வந்து கொள் விலைக்கே விற்று ஏழை மக்கட்கு உதவினர். இவர் செயல் வீட்டில் உள்ளார்க்கு வருத்தந் தந்தது. இவர் மதுரைக்குச் சென்று ஒரு முகம்மதியர் கடையில் கணக்குப் பிள்ளையாய் அமர்ந்தனர்.

நாள்தோறும் விடியல் மூன்று மணிக்கு எழுந்து வைகை நதிக்கேகி, 4 மணிக்குள் நீராடி, முன்னவனுர் வழிபாடு செய்து வந்தனர். சர்வஜித்து ஆண்டிலே ஒரு நாள் வழக்கம்

* மதுரையிலிருந்து, அறுப்புக்கோட்டை, புதூர், நாகலா புரம் வழியாக 52 மைல் சென்ருலும் இவ்வூரை அடைய லாம்.

போல் நீராடி முடிந்ததும், ஒரு சிறந்த அருட்ஜோதி கண்டு அருகே செல்கையில் அது ஒரு விநாயகர் போன்று ஜொலிக்க சுவாமிகள் ஆனந்த பாஷ்பம் சொரியச் சொல்லொணுப் பெரு மகிழ்வுடன் ஆலிங்கனம் செய்து கொண்டபோது, அது ஒரு விநாயகர் சிலையாக மாறியதைக் கண்டு, பேரானந்த முற்று அம் மூர்த்தியை எடுத்து, ஒரு மேடை மீது அமர்த்திப் பரிபூரண விநாயகர்' எனத் திருநாமம் சூட்டி, நீராட்டி மலர் சூட்டி தூபதீபம் காட்டி, நைவேத்தியம் செய்து வழிபாடு ஆற்றினர். அன்பர்கள் பலரும் இந்த அருட் செய்தி அறிந்து, அங்ஙனே அம் மூர்த்திக்கு ஒரு * திருக்கோயில் அமைத்த னர். சுவாமிகள் நாள்தோறும் அம்மூர்த்திக்கு வழிபாடு ஆற்றி வந்தனர். அன்பர்கள் கூட்டம் நிறைய வந்து கோரிய பயன் களைப் பெற்றும், குறைகள் பல நீங்கப்பெற்றும், நிறைநலம் பல ஓங்கப் பெற்றும், கைம்மேல் பலன் கண்டு களிமிகக் கொண்டு வழிபடலாயினர்.

சுவாமிகள் பின்னர் வியாபார நிமித்தம் கடைக்கு உரியவர்களின் கருத்தின்படி சில காலம் பம்பாய் சென்று தங்க நேர்ந்தது. அங்கும் தம் தினசரி ஒழுக்கத்தை முறை யுடன் போற்றி வந்தனர். அங்கிருந்து திரும்புகையில் வட இந்தியாவிலும், சென்னை மாநகர் போன்ற நகரங்களிலும் உள்ள கிறிஸ்தவப் பாதிரியார்களுடனும் அரசாங்க அலு வலர்களுடனும், அளவளாவ நேர்ந்தபோது, கிறித்துவ சமய உண்மைகளையும், கொள்கைகளையும், அரசாங்க சட்ட அமைப்புகளையும் உணர நேர்ந்தது. ஏற்கனவே கடைக்கு உரியவர்களோடு தொடர்பு கொண்டிருந்ததால், இந்துஸ் தானி மொழியும், இஸ்லாம் மதத்தின் கொள்கைகள், குரானில் உள்ள சிறந்த உண்மைகள், உயர்ந்த கருத்துக் கள் முதலியனவும் அவர்கள் உள்ளத்தே அமைந்திருந்தன. எல்லா மதங்களின் சிறந்த உண்மைகளும், உயர்ந்த

---

* இத் திருக்கோயில் மதுரை மாநகரில், வைகை நதியின் தென்கரையில், ரயில் வண்டி செல்லும் பாலத்திற்கு மேற் கில் கிழக்கு நோக்கியதாக அமைந்துள்ளது. நித்திய பூஜை நடந்து வருகிறது.

கருத்துக்களும், முடிவாக ஒரே பேருண்மையை விளக்கும் அற்புதம் அறிந்து, அனைத்துயிரும் இப் பேருண்மையைக் கடைப்பிடித்துப் பேரின்பமடைய எளியவழியொன்று இருத்தல் வேண்டும் என அவரது திருவுள்ளம் எண்ணியவாறே இருந்தது.

வடநாட்டிலிருந்து, மதுரை திரும்பிய சுவாமிகள் வைகை நதியில் நீராடி வழக்கம் போல வழிபாடு தொடங்கியது கண்ட அன்பர்கள் ஆனந்தமுற்றுக் கூடலாயினர். அடியவர் கூட்டம் பெருகி வந்தது. ஆனால் சுவாமிகள் அகமுக நோக்கில் அதிகமாக ஈடுபடலானார்கள். ஒரு நாள் வழக்கம் போல் கடையில் நிட்டையில் அமர்ந்த சுவாமிகள் சில நாட்கள் எழுந்திருக்கவே இல்லை. ஒரு நாள் எழுந்து குற்றாலம் சேர்ந்து, சண்பகமாதேவிக் கருகில் உள்ள ஒரு குகையுட் சென்று நிட்டையில் ஆழ்ந்தனர். பொதிகை மாமலையில் பல ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து பிறவிப்பயன் பெற்றனர். தாம் பெற்ற பேரின்பத்தை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எக்காலத்திலும், எவ்விதத் தடையுமின்றி, எவ்வித வேறு பாடுமின்றி, எளிய முறையில் பெற்றுய்ய வேண்டும் என்ற பெருங்கருணையுடன் 'சட்டம்' என்ற ஒரு சிறந்த செந்நெறியை வகுத்தருளினர்.

[சட்டத்தின் சிறப்பான கொள்கைகளின் சுருக்கம் வருமாறு:-

1. ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4 மணிக்கு மேல் 5 மணிக்குள் பச்சை நீரில் முழுக வேண்டும். தலை நனைய நீராட வேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது.

3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். [எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக்கப் படி வழிபாடு செய்யலாம்.] தண்ணீரில் திருநீறும் துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. உலகெலாம் படைத்துக்காக்கும் ஒரு பரம்பொருளைப் பல மதத்தினர் பல உருவங்களில் வழிபட்டுப் பயனடைகின்

றனர்; ஆனுல் பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித் தல் கூடாது.

5. புலாலுண்ணல், பொய் பேசல், கள் குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகைபிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல், பொல்லாரோடு உறவாடுதல் முதலியன செய்தல் ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ, ஒரு மனி தரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறை வனையே தஞ்சம் எனப் பற்றி, உறுதியாக நின்று, உயர் பயன் பெறுதல்.

7. வைத்தியம், ஜோதிடம், மாந்திரிகம் இவைகளை நம்பி ஏமாருமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவா மல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி' என்ற பரிபூர்ண நம்பிக் கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற் பயன் பெறுதல்.

8. இந்தத் தீது அகன்ருல், இந்த நன்மை கைகூடினுல் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் தீய பழக்கத்தை கைவிடுதல்.

9. நோயுற்ற காலை இருவேளை பச்சை நீரில் முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி மனமுருகி இறையருளை நாடி, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடைய வேண்டும். விஷக்கடி, வெட்டு ரணம், பிரஸவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு, தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.

11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்த வண்ணம், உடல் பொருள் ஆவி அனைத்தையும்

உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகுதல் வேண்டும்.

12. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள்நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும்.

13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால், அதற்காக வருந்தாது, அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும்போது, அறக்கடலாகிய இறைவனின் அருள் துணை நாடி அற முடிவைப் பெற முயலவேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

15. சட்ட நெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால், அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல்உபாதி முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தியாகும்.

16. 'வேலைக்கு ஏற்ற கூலி' என்பது போல், எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பயன் கிட்டுவதையும், தூய நல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்வதையும், நாம் நன்கு உணர்ந்து அருள்துணை கொண்டு முன்னேறலாகும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதையும், அதனால் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத்தையும், அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமையாகவோ பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது. இரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி

உய்வு பெறுதல் வேண்டும், எனச் சுவாமிகள் அருளியுள் ளார்கள் என்பது விளங்குகிறது.*

இவ்வாறு மிக உயர்ந்த அருட்பெரு நெறியை மாபெருங் கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள், ஆங்காங்கும் பக்குவம் பெற்ற அடியார் பலரின் இருப்பிடம் நாடிச் சென்று ஆட்கொண்டு அருள்புரிந்து அவர்களின் நல்வாழ்விற்கு அருந்துணையாய் நின்று, ஊக்கி வரலானார்கள். கி. பி. 1923 ஜனவரியில், துந்துபி ஷூ மார்கழி மீ 28உ வெள்ளிக்கிழமை ஏகாதசி திதி அனுட நன்னாளில் உடையவ னோடு இரண்டறக் கலந்தனர். சுவாமிகள் தரைமீது அவதரித்த அதே இடத்தில் அவர்கள் திருமேனி அடக்கம் செய்யப் பெற்று, திருக்கோயில் அமைக்கப் பெற்றுள்ளது.†

உலகினர் கண்ணுக்குத் தோன்றாது மறைந்தருளிய பின்பும் சுவாமிகள் அருட்சட்ட அடியவர்க்கும் அன்பர் கட்கும் என்றென்றும் துணையாயிருந்து அருளாட்சி புரிந்து பேணி வரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அறிந்து ஆனந்த முறுவது உண்மையிலும் உண்மை.

நாட்டின் பல பாகங்களிலும், பல இனங்களைச் சார்ந்த பல ஆயிரக்கணக்கான குடும்பத்தினர் மேற்கண்ட சட்ட முறைகளைத் தமது வாழ்க்கையில் கைக்கொண்டு ஒழுகி, இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எளிதிற்பெற்றுக் கைம்மேல் பலன்கண்டு வருவதை இன்றும் கண்கூடாகக்

---

* சுவாமிகள் வாழ்க்கை வரலாறும், அவர் உலகுக்கு வழங்கியுள்ள அருட்சட்ட நெறியின் விவரங்களும் இன்னும் விரிவாகக் காண விரும்புவோர், 'வழிகாட்டும் வான் பொருள்' என்ற நூலிற் காணலாம்.

† இத் திருக்கோயிலை விரிவாக்கும் திருப்பணி நடந்து வருகிறது.

விழுப்புரம்—திருச்சி குறுக்குப் பாதையில் திருவெண் ணெய் நல்லூர் புகைவண்டி நிலையத்தித்திற்கு அருகில் உள்ள அருள்நகரில் சுவாமிகளின் பெயரில் சங்கமும், எட்டாம் வகுப்பு வரை பள்ளியும், இலவச மாணவர் விடுதியும் உள்ளன,

கண்டு, எவரும் கையாண்டு நற்பயன் பெற்றுய்யலாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

அத்தகைய துறையில் ஓரளவு பங்கு கொண்டு செயலாற்றவே இப்பதிப்பகம் திருவருள் துணையால் தொடங்கப் பெற்றுள்ளது.

சுவாமிகள் அகங்கனிந்து அருள் நிறை நிலையில் இனிய நறுந்தமிழில் அருளியுள்ள செம்பாகமான பல பாடல்கள் வெண்பா, விருத்தம், சிந்து, கண்ணிகள், கீர்த்தனைகள், வண்ணப் பாடல்கள் முதலிய பல வகைகளில் நம்மனோரின் புண்ணியப் பயனால் நமக்குக் கிடைத்துள்ளன. சுவாமிகள் மீதும், பரிபூர்ண விநாயகர் மீதும் அடியவர், அன்பர்கள் பாடிய பாடல்களும் நிறைய உள்ளன. இவற்றில் பல அச்சாகி வெளிவந்துள்ளன. இன்னும் பல அச்சாகி வெளிவராமலும் உள்ளன. இன்னும் பல அடியவர்கள் புதிதாகப் பாடிக்கொண்டும் உள்ளனர்.

ஆண்டவர் பாடல்கள், அருள் விளக்கங்கள், அருட் சட்ட உண்மைகள், அற்புத நிகழ்ச்சிகள், அடியவர் பாடல்கள் முதலியவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தியும், ஆங்காங்கு பிரசாரம் செய்தும், கூட்டங்கள் நடத்தியும், மற்றும் பல துறைகளிலும் சுவாமிகளின் செந்நெறியின் சிறப்பைப் பலரும் அறிந்து பயன் பெறச்செய்யும் வகையில் 16-5-1971-ல், ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம், சென்னை மாநகரில், கோவிந்தப்ப நாயக்கன் தெரு, எண் 32-ல் உள்ள அடியார்கள் இல்லத்தில் துவக்கப் பெற்றுள்ளது.

அருள் வளர்ச்சி நாடும் பலரும் இப்பதிப்பகத்தில் ஆண்டு உறுப்பினர், ஆயுள் உறுப்பினர், புரவலர், நன் கொடையாளர் முதலிய பல துறைகளில் பங்கு கொண்டு உதவி புரிந்தும், பொருள், பணி, எண்ணம், உரை முதலிய வகைகளில் ஒல்லுந்தனையும் உதவி ஊக்கியும், எல்லாம் வல்ல ஸ்ரீ குருபரம் பொருளின் அருட்பெருங்கருணை மேன் மேலும் பெற்றுய்யக் கோரலாகிறது.

இங்ஙனம்,

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்**
**இலக்கியப் பதிப்பகம்,**

அடியார்கள் இல்லம்,
தொலைபேசி எண் : 34600
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை-1.

# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் திருப்பணி

சுவாமிகள், தாம் அவதரித்த இடத்திலேயே திருக்கோயில் கொண்டு எழுந்தருளி, அனைத்துயிர்க்கும் அருள் பாலித்து வருகின்றனர். அக்கோயிலை விரிவாக்கி அமைக்கும் திருப்பணி திருவருளால் தொடங்கப் பெற்று, இனிது நடந்து வருகிறது. திருப்பணி கைங்கரியத்துக்குக் காணிக்கைகள் வரவேற்கப் பெறுகின்றன. தொடர்பு கொள்ள விரும்புவோர், கீழ்க்காணும் முகவரிக்கு எழுத வேண்டும்.

**திரு. K. சாம்பசிவ அய்யர்,**
செயலாளர்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் திருப்பணிக்குழு,
இரெட்டியப்பட்டி, நாகலாபுரம் அஞ்சல்,
கோவில்பட்டி வழி, திருநெல்வேலி மாவட்டம்.

---

# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்

உலகம் உய்ய அருட்சட்டம் வகுத்து வழங்கி, அருளாட்சி புரிந்துவரும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் திருப்பெயரால் அமைந்த சங்கமும், எட்டாம் வகுப்புவரை கல்வி பயில்விக்கும் அருட்கொடிப் பள்ளியும், சுவாமிகள் திருப்பெயரால் அமைந்துள்ள இலவச மாணவர் விடுதியும் திருவருள் துணையால் இனிது பணியாற்றி வருகின்றன. தொடர்பு கொள்ளவும், உதவி புரியவும் விரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு எழுத வேண்டும்.

**திரு. ஆ. நரசிம்மலு,**
செயலாளர்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்,
அருள்நகர், கிராமம் அஞ்சல், விழுப்புரம் R. M. S.



இருடியர்பட்டிக் குருநாதர்

# பிள்ளைத்தமிழ் மகுடம்



# இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ் மகுடம்

## 1. காப்புப் பருவம்

பூமகள் புரிதவமோ, தமிழ் நாடு
புரிந்த தவப்பயனோ,
பொற்புறும் இருடியர் பட்டி புரிந்திடு
புண்ணியமோ, தினமும்
நேம முடன்கட வுட்கழல் பேணிடும்
நேயர்கள் செய்தவமோ,
நிலமிசை அடியவர் ஆதற் குரியவர்
நீள்தவமோ எனவே
[1]சேம மெலாம் உத வும்குரு பரன்ஒரு
சேயுரு வாகி யுளன்;
தேவர்கள் முனிவர்கள் யாவரும் வாழ்த்திடு
சிசுவுரு வாகி யுளன்;
ஓமெனும் உருவுடை யோய்! இம் மகவை
உவந்து புரந்தருளே
ஒப்புயர் வற்றெளிர் [2]சுப்பிர மணியனை
[3]ஓம்பி மகிழ்ந்தருளே.

## 2. செங்கீரைப் பருவம்

ஓங்கார மாகி மறை முதல் நடுவும் முடிவுமாய்
ஒளிரும் பரப்பிரமமே
உண்மையறி வானந்த உருவாகி உயிராகி
உலவியருள் செயல் வடிவமே
ஓங்காமலே குடத் துள்ளமை விளக்கென்ன
உள்ளடங்கிக் கிடக்கும்
ஒப்புயர்வில் பரிபூர்ண ஒளியைஉயிர் தோறும்நன்
றூக்கி உலகுக் குணர்த்தும்

---

[1]சேமம்—இன்பம். [2]சுப்பிரமணியம் — சுவாமிகளின் பெயர்.
[3]ஓம்பி—பாதுகாத்து.

பாங்கான குருமணி எனப் [1]போந்த பரமனே
பழமறை அனைத்தும் ஓதும்
பண்பெலாம் ஒருசட்டம் என்ன உலகுக்குப்
பரிந்தருள வந்த திறமே
ஆங்கார மாம்பேய் எம் உள்ளாடல் தவிர நீ
ஆடியருள் செங்கீரையே!
அருள்மிக்க இருடிநகர் [2]தெருள்மிக்க [3]குரவ நீ
ஆடியருள் செங்கீரையே.

## 3. தாலப் பருவம்

தந்தன தானன தனனத் தனதன
தானு தானுனு
அன்புரு வாய்[4]இவண் உறுதத் துவநினை
ஆராயாதே, யாம்
அஞ்சலி கூறிடும் அறிவற் றுளம்;எமை
ஆள்வாய்; சீராளா!
துன்பமெலாம் அற அருளற் குறும்உயர்
ஜோதீ! மாமாயா
தொந்த மெலாம்வில கிடநற் றவம்அருள்
தூயா! யோகேசா!
பொன்புகழ் பேரறி (வு) அருளைத் தரும் ஒரு
போதா! பூபாலா!
[5]புங்கவர் மாமுனி வரருட் பொலிவுறு
பூதேசா! மேலாம்
இன்பமெலாம் அருள் இருடிப் பதிமுநி
ஏறே! தாலேலோ!
எம்[6]பவ நோய்அற வருசிற் பரன்எனும்
ஈசா! தாலேலோ.

## 4. சப்பாணிப் பருவம்

தனதன தனதன தனனத் தனதன, தத்தா தத்தான
மறைகளின் முதல்நடு முடிவிற் றிகழ்பொருள்
வைப்பே! ஒப்பாரில்
மணியன அடியவர் திரளப் புரிபவ! [7]மட்டார் நற்பூவை

---

[1]போந்த—வந்த. [2]தெருள்—தெளிவு. [3]குரவ—குருவே!
[4]இவண்—இங்கு. [5]புங்கவர்—தேவர்கள். [6]பவம்—பிறப்பு.
[7]மட்டார்—மட்டுஆர்—தேன் நிறைந்த.

இறையடி மலர்களில் இடுநற் பணிசெய இப்பாருக்கோதி
இயலிசை மணமிகு தமிழிற் கவிதை யிசைத்தாள்
பொற்பாள !
துறைதொறும் உளஉயர் பொருளைத் தரும்ஒரு
சொத்தாகிச் சூழும்
துணையென மிளிர்பவ! ஒருநற் றிருநெறி
சொற்போதச் சூர !
குறையற அருள்புரி இருடிப் பதிகுரு ! கொட்டாய் சப்பாணி !
குழையுநல் உளமிசை அமர்சுப் பிரமணி!
கொட்டாய் சப்பாணி.

## 5. முத்தப் பருவம்

தானன தானன தனனத் தனதன
தத்த தனத் தனனு

'ஏகசொ ரூபனின் அருளைப் புவியினர்
இத்துறை யிற்பெறலாம்;
[1]ஏத மிலாநெறி இது பற்றுக' வென
இத்தர ணிக்கருள் வோய் !

போகமெலாம்[2]நனி யருளித் தவமுயல்
பொற்பும் அளித்தருள் வோய் !
போத சுகோதய ஒளியைத் தரும்ஒரு
புட்பம் அளித்தருள் வோய் !

[3]ஆகமெலாம் உயர் [4]தளியொத் தொளிர்வுறும்
அற்புதம் மிக்கருள் வோய் !
ஆதி பராபரன் எனவுற் றிவண் எம(து)
அச்சம் ஒழித்தருள் வோய் !

மோகமெலாம் அற அருளைப் புரிபவ !
முத்தம் அளித்தருளே !
மோனநல் வாழ்வருள் இருடிப் பதிகுரு
முத்தம் அளித்தருளே.

## 6. வருகைப் பருவம்

குயில்நிகர் குரல்அமை குருமணி எனவரு
குக ! சுக முநி வருக !

---

[1]ஏதம்—குற்றம். [2]நனி—மிகுதியாக. [3]ஆகம்—உடம்பு.
[4]தளி—கோயில்.

[1]கோதறு நாத மனேலய மேதரு
கோமள எழில் வருக!

[2]அயிலிணை யேநிகர் ஆழ்ந்தகல் நுண்ணிய
அறிவுடை யவ வருக!
அரஹர எனஒலி செயும் அடி யவர்உளம்
அமைசிவ ஒளிவருக!

பயில் மறை ஆகம சாத்திரம் ஆதிய
பகர் உயர் சாரமெலாம்
பண்பமை 'சட்டம்' எனத்தர இருடியர்
பட்டியில் வரு குரவ!

[3]சயில மெனும் பொதி காசல மேவிடு
தவமுநி வந்தருளே!
[4]சந்ததம் எந்தம் உளம் தொறும் அன்பு
தழைந்தி— வந்தருளே.

## 7. அம்புலிப் பருவம்

தனதன தனதன தனதன தனதன, தந்தா தந்தனு
[5]மகிதலம் ஒளிபெற வருகுரு பரனுடன்
வந்தா டம்புலியே
மதிநிதி தயவருள் மிகஅருள் பவனுடன்
வந்தா டம்புலியே

மகிமைகள் மிகவுடை அருள்வடி வினனுடன்
வந்தா டம்புலியே
வழியிது எனஅருள் நெறிதரு பவனுடன்
வந்தா டம்புலியே

மகிபனும் அதிபனும் எனஒளிர் இறையுடன்
வந்தா டம்புலியே
மணியன அடியவர் உளமுறை பவனுடன்
வந்தா டம்புலியே

மகிழ்வொடும் இருடியர் நகரமர் குருவுடன்
வந்தா டம்புலியே
வருகென நவில்பவன் வெகுளுமுன் அவனுடன்
வந்தா டம்புலியே.

---

[1]கோது அறு—குற்றமற்ற. [2]அயில்—கூர்மையான வேல். [3]சயிலம்—மலை. [4]சந்ததம்—எப்போதும். [5]மகிதலம்—பூமி.

## 8. சிற்றில் பருவம்

அக்காள் தங்கை எல்லோரும்
அன்பாய்க் கூடிப் பலநாளாய்
ஆலோசித்துப் பல பொருளும்
அரிதிற் சேர்த்தொன் றுய்க்கூட்டி

மிக்கார் வத்தோ டிவண் அழகு
மிளிரும் சிற்றில் அமைத்துள்ளோம்;
மென்மை மலராற் பூசிக்க
விக்நே சனையுள் ளமைத்துள்ளோம்;

தக்காய்! நீ அப் பூசைக்கே
தடையாய் ஒன்றும் செய்துவிடேல்!
தந்தை தாயார் நட்புடையார்
*தமர் யாவர்க்கும் இனியாய்! நீ

எக்காரணமும் கொண்டெங்கள்
எழிலார் சிற்றில் அழியேலே!
இருடிப் பட்டிக் குருபரனே!
எழிலார் சிற்றில் அழியேலே.

## 9. சிறுபறைப் பருவம்

சிறையுட் கிடத்தல்போல் உடலினுள் அகப்பட்ட
ஜீவவர்க் கங்கள் எல்லாம்
சிறுமையுறல் துயருறல் அறிந்துகரை யேற்றிடத்
தெய்விகப் பொலிவுடன் இவண்

இறைவன் அருளுருவம் என வந்தநினை யாமெலாம்
ஏத்தித் துதித்து மகிழ்வேம்;
இன்னல்எல் லாம்அறவும் இன்பஎல் லாம் மிகவும்
இகபர நலம் செறியவும்

நிறையறிவு பொறைபுனிதம் உள்ளன்பு மெய்ப்பக்தி
நேயம் அருளாற்றல் கருணை
நிகரிலா எண்சித்தி வல்லபம் சான்றுண்மை
நிலவ ஒளிர் நிமல மூர்த்தீ!

---

*தமர்—சுற்றத்தார்.

முறைமிகுநல் இருடிநகர் முநிவனே ! சிறுபறை
முழங்கொலி முழக்கி யருளே !
முத்தமிழ் அருட்கவிசொல் மெய்க்குரவ ! சிறுபறை
முழங்கொலி முழக்கி யருளே.

## 10. சிறுதேர்ப் பருவம்

காமனும் [1]மறலியும் ஏங்கிடு மாறு
கடுந்தவம் நல்கு பவ !
கருணை நிரம்பிய பூரண ! தெய்வக்
கற்பகம் ஒத்தவ ! தண்

சோமனும் [2]அங்கியும் [3]அருணனும் ஒன்றித்
தோன்றும் இடத்தொளி ரும்
ஜோதி எனத்திகழ் சுப்பிர மண்ணிய !
தூய அருட் குரவ !

போமென ஏழ்பிற விப்பிணி போக்கிடு
புங்கவ ! மண் முதலாம்
பூத பரம்பரை பொலிவுற அருள்புரி
புண்ணிய ! எண்ணரி தாம்

ஓமெனும் நாதம் எழுப்பிடு தலைவ !
உருட்டுக சிறு தேரே !
ஒளிர்இரு டிப்பட் டித்தவ சீல !
உருட்டுக சிறு தேரே.

---

[1]மறலி—எமன். [2]அங்கி—அக்கினி. [3]அருணன்—சூரியன்.



## இருடியர்பட்டிக்

# குருநாதர் பிள்ளைத்தமிழ்

### 1. காப்புப் பருவம்

1. திருவருள் எனும்தூய வடிவொடிரு டிப்பதித்
தேசிகன் உதித்துள் ளனன்
செம்பொருள் தெளிவை எளி துயிர்கட் குணர்த்தும்
*சேய் என உதித்துள் ளனன் [ஒரு
பருவம தறிந்தன்பர் பழவினை யெனும்தீய
படலத்தை நீக்கி அருளால்
பரிபக்குவம் செய்துள் ஓம்என்னும் மறையைப்
பதித்திட உதித்துள் ளனன்
கருவறையுள் இனியும் உயிர் வகைபுகவொ ணுதபடி
காத்திட உதித்துள் ளனன்
கதிகாட்டி மதிதீட்டி அருள்கூட்டி அமுதூட்டு
கருணைமிகு வள்ளல் இவனைப்
[1]பெருவரையி னிற்[2]கோ டொடித்துமறை வரையும்
பிரான் இனிது காத்தருள்கவே
பிரமன்முதல் மூவர்க்கும் முதலாக ஒளிர்பரப்
பிரமம் நனி காத்தருள்கவே. 1

2. [3]ஆவுடைய நங்கைஇக் கருவினைத் தாங்கிடமுன்
ஆற்றுபுண் ணியம்என் கொலோ
அருள்[4]வீர பத்திரப் பிள்ளை இப் பேறுபெற
ஆற்றுபுண் ணியம்என் கொலோ
பூவுலகி னிற்சைவ வேளாளர் குலம்முன்
புரிந்ததவம் என்ன தவமோ
பொற்புமிகு தமிழ்நாட்டில் இருடிநகர் புரிதவம்
புகலற் கெணற்கரிது காண்

---

* சேய்=குழந்தை, சுப்ரமண்யம்.
[1]பெருவரை = மேருமலை. [2]கோடு= தந்தம்.
[3]ஆவுடைய நங்கை=சுவாமிகளின் தாயார்.
[4]வீரபத்திரப் பிள்ளை = சுவாமிகளின் தந்தையார்.

[1]காவுடைய விண்ணுலகி னைப்பேணி அருள்செய்த
கந்தன் அவதாரம் இதுவோ
கணபதியின் அவதார மோஎனப் பெரியோர்கள்
கற்ருேர்கள் [2]கழறி மகிழ

மேவுமெய் யன்பழகொ டருளழகொ டுறுசேயை
விக்நேச் வரன் காக்கவே
விரியுலகி னைக்காக்க வரும்எழிற் குழவியை
விநாயகன் அருள்காக் கவே. 2

3. அன்புநெறி அறியாத வர்க்கு(ம்)மெய் யன்புநெறி
அருளால் உணர்த்த உன்னி
அவதரித் திட்டதே போல் அன்பின் உருவமோ(டு)
[3]ஆரியன் உதித்துள் ளனன்

இன்பம்எல் லாஉயிரும் எய்த அருள் புரிமுநிவன்
இருடிநக ரில்தோன் றினன்
எங்கடியர் ஆவதற் குரியர்உள் ளார்என்ன
எண்ணி அங்கங்க டைந்து

[4]பொன்புரையும் நற்குணப் புனிதரைக் குருகருணை
புரியும் நாள் உளதோஎனப்
பொங்குமெய் யன்போடும் எதிர்பார்த் திருக்கின்ற
புண்ணியரை நாடி அருளால்

என்பும் உருகும்படி இதம்சொல்லி அருள்நெறிக்
கீர்ப்பவன் உதித்துள் ளனன்
இத்தகைய நற்[5]குரவ னைக்கய முகக்கடவுள்
இனிதுகாத் தருள்புரிகவே. 3

4. மனம்எனும் நிலத்தைஅறி வால்உழுது மெய்யன்பை
வளமுற விதைத்தி னருள்நீர்
வகையுறப் பாய்ச்சிஅறு வகையான களைநீக்கி
வான்பொருள் விளைக்க வல்லோன்

இனம்உன்னி மகிழ்வுறச் சைவவே ளாண்மரபில்
இருடிநக ராம் தலத்தில்
இயம்பஅரி தாம்உண்மை அன்பழகு சால்அருள்
இளங்குழவி யாய்வந் துளன்

---

[1]கா=கற்பகச் சோலை. [2]கழறி=கூறி. [3]ஆரியன்=குரு.
[4]பொன் புரையும்=பொன் போன்ற. [5]குரவன்=குரு.

அனம் என்ன நவைநீக்கி அருள்ஏற்று வாழ்உண்மை
அடியாரை அருளி னுற்கண்(டு)
அம்கணுல் மனதினுல் செங்கையால் பரிசித்(து)
அருட்கருணை பாலித் தருள்

தினகரன் உதித்துளன் இவன்றனை முதற்கடவுள்
திருவருள் புரந்தருள் கவே
தேசிக சிகாமணியை முக்கண்ஐங் கரமுனேன்
திருவருள் புரந்தருள் கவே. 4

5. புவனிமுதல் ஐம்பூத மும்கதிரும் மதியமும்
புனிதமிகும் உயிர்வர்க் கமும்
பூமகனும் இந்திரனும் மாலும்உமை கொழுநனும்
*புத்தேளிர் குழுவும் வாழ்த்தத்

தவநெறிசெல் முனிவரரும் எண்சித்தி யுடையரும்
சாந்தமிகு மோனியர் களும்
தமிழ்மறையை ஓதுநரும் நாலுமா மறைசொலிச்
சாலமகிழ் வெய்து பவரும்

பவநெறி விலக்கிஉயர் பக்குவம் பெறநாடு
பக்தர்குழு வும்போற் றிடப்
பண்புமிகு சமயமதம் எல்லாமும் ஓதருட்
பயனைத் திரட்டி யெளிதாய்

நவயுகச் சமயம்என ஒருதிரு அருட்சட்டம்
நல்கு குரு வந்துள் ளனன்
ஞானமிகும் இருடிநகர் வருமிவனை எங்கள்கண
நாதன்என் றும்காக் கவே. 5

6. ஓமென்னும் அக்கரப் பெருமையை உணர்த்திஅருள்
ஓங்குநிட் டையை உணர்த்தி
உலகில் இக சுகமோடு பரசுகமும் எய்தும்வழி
ஓதி ஒழுகிடவும் உதவிப்

பாமன்னு பொருள்காட்டி ஒளிகூட்டி அருளூட்டு
பரம காருண்ய மூர்த்தி
பத்திநிலை சித்திநிலை ஞானநிலை மோனநிலை
பாலிக்கும் இன்ப மூர்த்தி

* புத்தேளிர் = தேவர்கள்.

நாமன்னு மொழிசெய்கை நினைவாதி களில்மாசு
நணுகாது காக்கும் மூர்த்தி
ஞான குருமூர்த்தி அருள்மூர்த்தி புண் ணியமூர்த்தி
நல்லிருடி நகர் வந்துளன்

பூமன்னு பிரமன் அருள் சித்தியொடு புத்திமகிழ்
புங்கவன் காத்தருள்கவே
புனிதகுரு நாதன்இவ ணைப்புவியின் மீது [1]பரி
பூரணன் காத்தருள் கவே. 6

7. சீரோங்கு ஞானமாம் செல்வம் மெய்யன்(பு) அருட்
செல்வம்எல் லாம்சி றக்கத்
தேவர்முனி வரர்கருடர் கந்தருவர் கிம்புருடர்
சித்தர்கின் னரர் இயக்கர்

ஏரோங்கு போகபூ மியர்உரகர் பூதர்வித்
யாதரர் தயித்யர் நிருதர்
இயல்வான வாசிகள்பை சாசர்அந் தரர்அசுரர்
இனிது போற்றிக்க ளிக்கப்

பாரோங்கு பாண்டி நாட் டாலவாய்த் தென்திசையில்
பகர்காதம் ஐந்தில் அமையும்
பக்தியொடு ஞானமிகும் இருடிநக ரிற்குரு
பரன் குழவி யாய்ப்போந் துளன்

ஊரோங்க உலகோங்க உளமோங்கு வளமோங்க
உயிரோங்க வந்த இவனை
[2]உவணகே தனன்மகளிர் முந்நால்வ ரையும்
ஒளிர்கணே சன்காக் கவே. [மணந்(து) 7

8. செவ்வியசன் மார்க்கநெறி அறியாமல் உலகினர்
திகைப்புறுதல் கண்டிறை வனின்
திருவருளொர் உருவெய்தி யாங்கிருடி நகரில்ஒரு
தேசிகன் உதித்துள் ளனன்

---

[1]பரிபூரணன்=சுவாமிகட்கு அருட்காட்சி அளித்த பரி பூரண விநாயகர்.

[2]உவண கேதனன்=கருடக்கொடியனும் திருமால். மகளிர் முந் நால்வர்=12 பெண்கள்.

“ விஷ்ணுபுத்ரி பன்னிருவர் வேட்ட திருமணவாளனே” சுவாமி கள் அருட்பாடல். இக்கதையை விநாயக புராணத்திற் காணலாம்.

எவ்வியலும் நல்லியல் எனக்கண்டு மதசமயம்
எல்லாம் இயம்பு பொருளை
இணையிலாத் திருவருட் சட்டம்என் றினிதருளும்
எம்பிரான் போந்துள் ளனன்

பவ்வம்ஏழ் எனவுறு பவம்கடத் திடும்நல்ல
படகெனப் போந்துள் ளனன்
பத்திநிலை சித்தியியல் முத்திநலம் எல்லாம்
பரிந்தருள வல்ல இவனை

அவ்வைதிரு நாரையூர் நம்பிகபி லர்க்கருளும்
அண்ணல்காத தருள்புரி கவே
அறுமுகவன் வள்ளிதிரு மணம்முடித் தகமகிழும்
அத்திகாத் தருள்புரி கவே. 8

9. செல்வம்எல் லாம் புவியினிற் செழித்திடவும்
சிறந்தமெய் யன்போங் கவும்
தெய்விகச் சக்திமிக வளரவும் தீமைகள்
சிதைந்துநல மேபெரு கவும்

கல்வியின் பயனும்அறி வின்பயனும் அன்போடு
கடவுளருள் பெறுதல் என்னக்
காசினியில் வாழ்உயிர்கள் இனிதுணர்ந் துயவும்
கண்டுநல் கிக்காப் பவன்
[நெறி
வல்வினை யெலாம்தவிர்த் தருள்வாழ்வும் எண்சித்தி
வல்லபமும் ஈந்தருள் பவன்
மங்களம் எலாம்தந்து மரபெலாம் மகிழ்வெய்த
வரமெலாம் இனிதருள் பவன்

பல்வளம் மிகுந்தஇரு டிப்பட்டி யின்கண் அருள்
பாலிக்க வந்த இவனைப்
பரமசிவன் [1] இவர்இரதம் அச்சொடித் துக்கருணை
பாலிப்ப வன்காக் கவே. 9

10. [2]சததளத் தமர்பிரமன் இந்திரன் முராரிசிவன்
[3]சாரதை [4]ரமா மலை மகள்
[5]சசிஅமரர் சுரமகளிர் முநிவர்முநி பத்திநியர்
சகல உயிர் வகையும் மகிழ

[1] இவர்=ஏறும். [2] சததளம்=தாமரை. [3] சாரதை=ஸரஸ்வதி
[4] ரமா=திருமகள். [5] சசி=இந்திராணி.

இதமுடன் அருட்சட்ட நெறிபுவிக் கீந்தருளும்
இனியகுரு பரன் வந்துளன்
இகபர சுகம்கொடுத் தெவ்வுயிரை யும்காக்க
இருடிநக ரிற்போந் துளன்

உததியுடை அணிபுவியும் ஏனைஉல கங்களும்
உவந்தேத்தும் இவனை இனிதே
உமைபரமன் மடியின்மிசை அழகுற அமர்ந்தருளும்
ஓங்கார உருவம் உடையோன்

மதகளிறு முகமுடைய மதுரைநகர் நாயகன்
வனப்புமிகு பரிபூரணன்
வரசித்தி புத்தியொடு வல்லபையும் மகிழ்கணவன்
மாண்புறக் காத்தருள் கவே. 10

## 2. செங்கீரைப் பருவம்

11. உலகம் தோன்றிய நாள்முத லாக
உயர்ந்தோர் பலர் வந்தார் ;
ஒப்பில் அருட்சுகம் எய்திஇவ் வுலகுக்
குற்ற பயன் பெற்றார் ;

'உல(கு)இச் சுகமுறல் வேண்டும்' எனப்பலர்
உன்னி, உரைத்து முளார் ;
ஒருசிர புரமுநி* பலரைச் சோதியுள்
உய்த்தனர் ; "என்றென்றும்

உலகுறும் உயிர்கள் அருட்சட் டப்படி
ஒழுகிமெ யின்புற லாம்
ஒருசிறி தும்தடையில்லை" ; என ஓதி
ஒளித்திரு நீறரு ளும்

அலகில் அருட்குரு பர ! அடி யார்முனர்
ஆடுக செங்கீ ரை !
அருள்மிகும் இருடிப் பட்டிக் குருபர !
ஆடுக செங்கீ ரை. 1

12. 'காலத் தொடுகற் பனைகட் கெட்டாக்
கவின்மிகு திருவரு ளே
காசினி மீதொர் உருக்கொடு வந்தது
காண்க' எனப்பெரி யோர்,

---

* சிரபுர முநி=சீர்காழியில் அவதரித்த திருஞானசம்பந்தர்.

மூலத் திருமறை ஓதி முழுக்க
முழுக்கச் சுகம் எய்தி
மோதக பாணியன் அருள்மிகு புண்ணியர்,
முக்தர்கள், யோகியர்கள்
'சீலத் தவர்தொழு சீரிய!' என்று
சிறப்பொடு போற்றி செயத்
திருவருள் விழிகொடு கருணை புரிந்தருள்
தேசிக மாமணி யே!
ஆலத் தையும்அமு தாக்கிட வல்லவ!
ஆடுக செங்கீ ரை!
அருள்மிகும் இருடியர் பட்டிக் குருபர!
ஆடுக செங்கீ ரை. 2

13. திருவே புகழே செயலே பயனே
தெய்விக மாம்சுவை சால்
செவ்விள நீரே பாலே பாகே
திருவமு தேஅரு ளாம்
உருவே உயிரே உளமே உளமிசை
ஊறிடும் அன்பூற் றே
உகரமும் அகரமும் மகரமும் எனஅமை
உண்மை ஒளித்திர ளே
குருவே குருஅருள் நெறியே குறைதவிர்
கொள்கை அருள்பவ னே
கோபுரம் நாற்புற மண்டபம் மேவிய
கோயிலுள் உள்ளவ னே
அருவே அறிவரும் அறிவே அடியர்முன்
ஆடுக செங் கீரை
அருள்மிகும் இருடியர் பட்டிக் குருபர
ஆடுக செங் கீரை. 3

[வேறு]

14. ஊனேயும் உடல்ஆவி பொருள்அர்ப்பணம் செய்தும்
உன(து)அடித் துணைபற் றியும்
ஒவ்வொரு கணத்தினிலும் 'ஓம்குருபரா!'என
உரைத்தும் மனம் மிகஉருகியும்
கோனே!மெய்ஞ் ஞானமாம் சிங்காத னத்தின்மேல்
கொலு வீற்றிருந்(து) அருட்செங்
கோல்ஓச்சி அருளாட்சி செய்(து)எலா உலகிலும்
குறைதீர்த்து நிறைவை அருள் பூ

மானே! எனத் தினமும் வழிபாடு செய்துமகிழ்
வழியடியர் இன்ப வாழ்வே
வழிகாட்டும் வான்பொருள் எனுஇருடி நகர்வந்த
வள்ளலே கள்ளமில் அருள்

தேனே இனிப்பே செழிப்பேநல் அடியர்முன்
செங்கீரை ஆடி யருளே
சித்தமலம் நீக்கியருள் சித்தர்தலை வாஇனிது
செங்கீரை ஆடி யருளே. 4

15. வாலாய மாய்த்தினமும் அதிகாலை துயில்நீங்கி
மாண்பொடுத ணீரில் மூழ்கி
வளமெலாம் நல்குதிரு நீறணிந் தன்போடு
வழிபாடு செய்க என்றே

நாலாய மறையாதி நூல்எலாம் நவிலும் இதை
நன்று ணர்ந்(து) ஒழுகி உய்க
நற்பயன் அடைந்துபிற விப்பிணி தவிர்ந்துமெய்ஞ்
ஞானசுகம் எய்து கெனவே

ஆலாலம் உண்டசிவன் அம்மைஉமை அருள் குமரன்
ஆதிபரி பூரணன் அருள்
ஆலவா யிற்பொதிகை யிற்பெற்றவ் அருள்உதவ
அழகிருடி நகரில் மகவாம்

சீலா !மெய் அன்பர்திரு வுளம்மகிழ்வு கொளஇனிது
செங்கீரை ஆடி யருளே
ஜீவநிலை அன்றீது, தேவநிலை என்றினிது
செங்கீரை ஆடி யருளே. 5

16. நஞ்சனைய நெஞ்சினையும் அமுதாக மாற்றிஅருள்
நல்கவல ஞான முதலே
நாமம்உரு வம்தரித்(து) உலகினுக்(கு) அருள்புரிய
நண்ணும் நால் மறையின் முதலே

பஞ்சனைய வல்வினைப் பொதியெலாம் பற்பமாப்
பண்ணு தவ மான கனலே
பழமையொடு புதுமைநிறை திருவருட் சட்டம்
பரிந்துதவி ஆளும் அரசே

அஞ்சல்என அடியார்களுக்(கு) அபயம் ஈந்துகாத்(து)
அருள்அமு(து) அருத்து துணையே
ஆசார சீலங்கள் ஆகார நியமங்கள்
அருள் நிட்டை நல்கு குருவே
செஞ்சரண கமலம்என் சென்னிமிசை சூட்டுபவ
செங்கீரை ஆடியருளே
செல்வஇரு டிப்பட்டி மல்கவரு குருநாத
செங்கீரை ஆடி யருளே. 6

17. அட்டமா சித்தியையும் ஐங்கரக் கடவுள்திரு
அருளையும் பூவுல கினில்
அளவிலா உயிர்களுக்(கு) அருள்நெறி உணர்த்தி
அருள்வாழ்வு தரவருபவ [உயர்
கெட்டன எலாம்விலக நல்லன எலாம்மிகக்
கிருபைபுரி யும்த யாள
கேடிலா வாழ்வைஎப் போதும்எவ் வுயிர்களும்
கிளர் மகிழ்வொ டேற்றுய்ய லாம்
துட்டர்களும் நனிதிருந் திடலாம் இகத்திலமை
சுகமெய்தி முத்தி பெறலாம்
தூய்மைபெற அணைவோரும் வருகெனத் திருவருள்
சுரந்தூட்டு கருணை உருவ
சிட்டர்தொழு தேத்தஅரு ளழகோடு திகழ்பகவ
செங்கீரை ஆடி யருளே
செல்வஇரு டிப்பட்டி மல்கவரு குருநாத
செங்கீரை ஆடி யருளே. 7

18. சுற்றம் பலப்பல இருப்பினும் நினைப்போல்
துணை செய்ய யாவர் வருவார்?
துயர் உற்ற போ(து) அதை விலக்கிட, நலம்செயத்
தூய்மை தர யாவர் வல்லார்?
குற்றம் பல்கோடியெனினும் பொறுத்(து) அருள்நல்கு
குணசீல! நின்னை அல்லால்
குவலயத் தில் துணை கிடைக்குமோ? நின்கருணை
கூறுதற்(கு) எளிதா குமோ?
முற்றன்பி லேவிளை முழுச்சோதி வடிவமே!
மூலமறை யான பரமே!
மோனநிலை தரவல்ல முத்தர் மணியே! இன்ப
முத்தி தர வல்ல மணியே!

சிற்றம் பலம்காணும் வகைஉணர்த் திடும் இறைவ!
செங்கீரை ஆடி யருளே!
செல்வ இருடிப்பட்டி மல்கவரு குருநாத!
செங்கீரை ஆடி யருளே. 8

(வேறு)

19. எவ்வுல கும்திரு அருள்மெரு கேறி
இயங்கிடவும், புவி மீ(து)
எவ்வுயி ருள்ளும் அருள்புகவும், புகல்
எம்மொழி யிலும் அருளே
திவ்விய மாக விளங்கவும், நாலிரு
திசையிலும் நின் சட்டம்
திகழவும், நல்திரு அருள்வளம் ஓங்கிச்
செழுமை மிகுந்திடவும்,
[1]எவ்வம் எலாம்வில கிச்செலவும், பகை
ஏதும் பொடிபட வும்
இருவினை [2]மும்மலம் [3]முக்குற் றம்கெட,
இன்ப நலம் மிகவும்,
செவ்விய பேரருள் உருவொடு வருபவ!
செங்கோ செங்கீரை;
திருவளர் இருடிப் பட்டிக் குருபர!
செங்கோ செங்கீரை. 9

(வேறு)

20. குழல்இனிது யாழ்இனி(து) எனக்கூறிடோம் நினது
கொஞ்சும்எழில் மழலை விழைவோம்
குருபரா நீஎந்த சிற்ருெலி எழுப்பினும்
குருஅருள் செய் உபதேசமாம்
மழலைமொழியால் 'ஓம்' எனச்சொலின் செவியொடு
மனம் குளிர ஏற்றுய்வமால்
மயக்கம் எல்லாம்அற மறைப்பொருளை இனிதருளும்
மதலைநின் மழலை மறையாம்
மழகளிறு முகன்உருவை மதுரைநக ரிற்கண்டு
மாண்புடன் அணைந்து மகிழ
[4]மலையமிசை தவம் உஞற்றிக் கருணைநிறைவிஞல்
மன்னுசட் டம்வ ழங்க

[1]எவ்வம்—துன்பம்.
[2]மும்மலம்—ஆணவம், கன்மம், மாயை.
[3]முக்குற்றம்—காமம், வெகுளி, மயக்கம்.
[4]மலையம்—பொதிகைமலை.

அழகுமதி முகமொ(டு) அருள் இருடிநகர் உறுதலைவ
ஆடியருள் செங்கீரை யே
அமல மிளிர் கமலபத! எமர்முமலம் அடுநிமல
ஆடியருள் செங்கீரை யே. 10

## 3. தாலப் பருவம்

21. மங்களம் எங்கும் நிறைந்திட வையமும்
வானுலகும் பரவ
வழிகாட் டிடும்ஒரு வான்பொருள் எனஇவண்
வந்தருளும் குரவ
பங்கயம் ஒத்த முகம்கண் கரம்இரு
பாத முடன் திகழும்
பக்த [1]பவித்திர முக்தர் உளத்தவ
பக்குவம் மிக்கருள் வோய்
கங்கையில் மூழ்கி அடைந்திடு பயன்அதி
காலை தணீர் ஆடிக்
காசினி யோர்பெற வல்வினை அறஉயர்
கருணை சுரந் தருள்வோய்
தங்க மெனும்குண புங்கவர் தம்குரு
தாலோ தாலேலோ
சட்டம தைத்தரும் இருடிந னகரிறை
தாலோ தாலேலோ. 1

22. அக்கரம் ஒன்றினுள் ஆரணம் ஆகமம்
அளவறு கலைகள் எலாம்
அடங்கி ஒடுங்கிடும் மீள உதித்திடும்
அற்புத மாய்விரி யும்
இக்கரு ணைத்திரு மாமறை யைப்புவி
இலகும் பலஉயி ரும்
இதமுற ஓதிடின் நிட்டை புரிந்திடின்
எந்நல மும்பெற லாம்
எக்கணமும் தவரு திதை ஓதி
இகம்பரம் ஆதி யெலாம்
இனிதெய் துகஎன நன்று விளக்கி
இருட்[2]பட லம்வி லகத்

---

[1]பவித்திரன்—தூய்மைசால் மேலோன்.
[2]படலம்—திரை.

தக்கநல் அருள்நெறி தந்தருள் குருபர
தாலோ தாலேலோ
[1]தகவருள் இருடிப் பட்டித் தவமுநி
தாலோ தாலேலோ. 2

23. விச்சை யெலாம்அருளால் உணர் விற்பன
விரியுல குயிர்கள் படும்
வேதனை தீர்த்தருள் வாழ்வு வழங்க
விழைந்து புவிக்கண் ஒரு

பச்சை இளங்குழ விப்படி வோடு
படர்ந்த பவித்திர எம்
[2]பவம்எனும் ஏழ்கட லும்[3]சுவ றப்புரி
பார்த்திப போகம் எலாம்

இச்சைப் படிநுகர் வித்தும் நிறுத்தியும்
இனிதே பரிபா கம்
எய்தப் புரிபவ [4]நவயுகம் ஒன்றினை
எழிலுடனே [5]நிறுவும்

[6]தச்ச! நல் இருடிப் பட்டியில் வருகுரு
தாலோ தாலேலோ
சத்யப் பயிர்தழை யத்தழை பைம்முகில்
தாலோ தாலேலோ. 3

24. ஆழி யுடுத்த புவிக்கண் உதித்த
அருட்பெரி யார்கள் எலாம்
அகமொடு புறம்மிகு தூய்மை நிறைந்(து)அருள்
அனுபவ முதிர் வெய்தி

ஏழிசை பாடினர்; ஆடினர்; நாடினர்
இவ்வுல குயிர்க ளெலாம்
இத்தகு பேரின் பானுப வம்பெற
எதுவழி எனநா ளும்;

காழியில் வரு[7]கவு ணியனூர் பலரைக்
கருணைச் சோதி யினுள்
கணநே ரத்தினில் உய்த்தனர்; என்றும்
காசினி வாழ் உயிர்கள்

---

[1]தகவு—மேன்மை. [2]பவம்—பிறப்பு.
[3]சுவற—வற்ற. [4]நவ யுகம்—புதிய யுகம்.
[5]நிறுவும்—அமைக்கும். [6]தச்சன்—சிற்பி.
[7]கவுணியனூர்—திருஞானசம்பந்தர்.

வாழி எனப்பர மாநந்தம் பெற
வைப்பவ தாலேலோ
வளமிகும் இருடிப் பட்டியில் வந்தருள்
வரதா தாலேலோ. 4

25. திரமுற நிலையா தலைவுறு மனமேல்
திகழுக ; இனியேனும்
திறமுற நிலைபெற்றிட அருளுக நின்
திருவடி யாம்மல ரில் ;
புரமெரி செயவுறு பரன்இவர் இரதப்
பொலிவு சிதைத்துப் பின்
புரையறு கருணைசெய் பூரணன் அருளாம்
புனித நின் அடிதொழு வோர்
வரம்அள விலபெற வினைபிணி தவிர்வுற
வழிநவில் விழுமிய நல்
வாசியும் விளைவுற நேசமும் நிலைபெற
வல்லபம் மிக அருளித்
தரமிகும் அடியவர் துணையென உறுபவ
தாலோ தாலேலோ
தரைமிசை இருடிப் பட்டியில் வருகுரு
தாலோ தாலேலோ. 5

26. கணையென உற்றறு பகை[1]யினை வெல்லக்
கருணை செயும் குரவ
கரைகாணாது பவக்கடல் ஆழ்ந்து
கலங்கும் உயிர்க் குதவப்
[2]புணையென உற்றரு ளாம்கரை காட்டிப்
பொற்புடன் உய்த்தரு ளும்
புனித புராதன புண்ணிய நண்ணும்
புலஇச் சைகள் அணு கா(து)
அணையிட வல்லவ பக்குவம் மிக்குற
அருள் புரியும் பரம
அமல பராபர விமலசு கோதய
அயர்வற உயர்வருள

---

[1]அறுபகை—காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம். [2]புணை—தெப்பம்.

இணையிலை எனஉயிர் வகைதொழ இனிதுறும்
இறைவா தாலேலோ
இருடியர் பட்டி யெனும்பதி தனில் வரும்
எழிலே தாலேலோ. 6

27. முரணும் நெறிசெலல் முறையோ? எனஅருள்
முறையால் வினவி, உயர்
முறையாம் திருநெறி தரவே இவண்வரு
முனிவா! முத்தி அருள்
சரணும் புயமலர் சிரமீ துறஅருள்
சமயா தீத சுகா!
சகலா கமமறை அருளால் உணர்வுறு
தலைவா! அருளமு தார்
கரணு! நலம்அருள் கருணுகர! உட்
*கழரு மறைகழ றும்
கவினுர் அருள்மக வெனவே வருபவ!
கதிகாட் டிடு குரவ!
அரணுய் அமைபவ! அடியார் துயர்தவிர்
அமலா! தாலேலோ!
அழகார் இருடியர் பட்டிப் பதிவரும்
அதிபா! தாலேலோ. 7

28. நன்மார்க் கந்தனை உணரா(து) உயிர்பல
நலிவுறல் கண்டினிதே
நற்றவம் ஆற்றிடு நன்னெறி காட்டிட
ஞாலத் துறு குரவ!
பன்மார்க் கத்திலும் அலையா வணம்இப்
பார்வாழ் அன்பர்களைப்
பரிவொ டழைத்திக பரசுகம் இனிதருள்
பண்பு மிகும்சட் டம்
சன்மார்க் கத்தில் உயர்ந்தது கைக்கொடு
தண்ணீ ரினில்நா ளும்
தக்கநல் விடியலில் மூழ்கித் திருவருள்
தனையே துணையாக் கொண்(டு)
என்மார்க் கத்தினில் வருகென ஈர்த்தருள்
இறைவா தாலே லோ
இருடியர் பட்டிப் பதிவரு திருவருள்
எழிலே தாலே லோ. 8

*கழரு மறை—மவுனேபேதசம்.

[வேறு]

29. காற்ருல் புவியால் ககனத்தால்
கனலால் புனலால் கதிர்மதியால்
காலக் கூற்ருல் உயிர்கட்குக்
கவலை வராமல் காப்பவனே
நேற்ருய் இன்ருய் நாளையுமாய்
நிகழ்கா லமும்செல் காலமுமாய்
நித்யா நித்யப் பொருள் உணர்த்தும்
நியமம் தவரு நெறியினனே
சோற்ருல் அடைத்த துருத்தி இதைத்
தூய மணிப்பொற் கோயில் எனச்
சூழ்ந்துள் ளமர்ந்தே அருள் விளக்கும்
தூங்கா விளக்கே கருணையமு(து)
ஊற்ருய்ச் சுரந்து பலஉயிர்க்(கு) இன்(பு)
ஊட்டும் குரவா தாலேலோ
உயர்வார் இருடிப் பட்டிவரும்
ஒருவா தாலோ தாலேலோ. 9

30. ஓமென்றே உள்ளும் புறமும்
ஓயா(து) ஒலித்துத் திருவருளார்
ஒளியை விளக்கும் செங்கதிரே
ஒப்பில் கருணைத் தண்மதியே
தாமென்றே உள் அகந்தையினுல்
தருக்கித் திரிவோரையும் திருத்தத்
தரைமேல் போந்த தவமணியே
தகரா லயத்து ரகசியத்தைப்
போமென் றே வல் வினைவிலக்கிப்
பொற்போ டுணர்த்திப் பொலிமணியே
புனிதம் மிகுந்த புண்ணியரைப்
பூப்போல் காக்கும் புகழ்மணியே
ஆமென் றே எல் லாம்புரியும்
அருள்மா மணியே தாலேலோ
அழகார் இருடிப் பட்டிவரும்
அமலா தாலோ தாலேலோ. 10

## 4. சப்பாணிப் பருவம்

31. முழுப்பைந் தமிழின் கடவுள் எனும்
முருகன் மணம்முன் முடித்துமகிழ்
மோனச் செல்வன் மூலமறை
முழங்கும் பரிபூ ரணன் உருக்கண்(டு)

இழுப்புண்(டு) ஓடி அணைந்து மகிழ்ந்(து)
இன்பம் பெருக அருட்பாடல்
இனிதே பாடி யருள் குருவே
எழிலார் ஞான மறைமுதலே
விழுப்பம் செறிந்த தவமணியே
வேதாந் தத்தில் விளை அமுதே!
விளங்கும் சட்ட நெறிவழங்கி
விடியற் காலை அடியவரை
எழுப்பும் செயலும் செய்தருள்வோம்
எனவே கொட்டாய் சப்பாணி
எழிலார் இருடிப் பட்டிவரும்
இறைவா கொட்டாய் சப்பாணி. 1

32. அனையே அப்பா ஆசானே
அருளார் குருவே ஆண்டவனே
அகமே புறமே அறிவொளியே
அறமே பொருளே அருளமுதே
நினையே இணையில் துணையெனக்கொள்
நேயம் மிகுந்த மெய்யடியார்
நினைவில் நிலைத்(து) அன்புதவி அவர்
நினையா முனம்வந்தருள் இறையே
எனையே விழுங்கி நினைவழங்கி
இன்பம் தரும்நாள் எந்நாளோ
என்றே எதிர்பார்த் திருக்கின்றேன்
எழிலார் இருகை களைச்சேர்த்(து)என்
வினையே விலக ஒலி எழுப்பி
விமலா கொட்டாய் சப்பாணி
விழவார் இருடிப் பட்டிவரும்
*விபுவே கொட்டாய் சப்பாணி. 2

[வேறு]

33. ஒருமைமிகு மனதினுடன் உன்னடி நினைந்தேத்தும்
உத்தமர்கள் நேயம் உதவி
உண்மைமொழி அன்புவழி ஒருதீங்கும் இல்லாத
உயர்செய்கை யாவும் உதவிப்
பெருமைமிகு மாறுதவி மெய்யடியர் களைநன்று
பேணியாண் டருளும் மணியே
பிரமன்மதன் எமன்மூவர் செயலும்அணு காவணம்
பெட்புறக் காக்கும் மணியே

---

*விபு—கடவுள்.

இருமை நலனும் பெருக இருவினையின் வலியற
இரும்புமன மும்பொன் ஆக
இருமூன்று பகைவிலக இருகைகூட் டிக்கொட்டி
எச்சரிக் கின்ற தேபோல்
தருமஇரு டிப்பட்டி வருபகவ! அருளுருவ!
சப்பாணி கொட்டி யருளே
சாந்தசுகம் ஈந்தருள்செய் காந்தன்என வருகுரவ
சப்பாணி கொட்டி யருளே. 3

34. உடுக்கின்ற கடலாடை உலகினுக்(கு) அருள்ஒளியை
உதவு கதிரே! அடியவர்
உண்மைஅன்(பு) அழகுற உளத்தினில் வரைந்
உயிரோவி யத்தின் உருவே! [தேத்தும்
தொடுக்கின்ற தெய்விகத் திருவருட் பாடலின்
சுவையே! சிறந்த தமிழின்
துறைசென்ற அருளாளர் சொற்றதிரு முறையுள்
துலங்குநுண் பொருளே! [1]நசை
விடுக்கின்ற ஞானியர் உளக்கோயி லில்திகழ்
விளக்கே! அருட்செல் வமே!
வினைவலியும் மிகுபற்றும் முக்குற்ற மும்தொட
விடோம்என்று சைகை காட்டித்
தடுக்கின்ற தேபோல இருகைசேர்த்(து) அழகுறச்
சப்பாணி கொட்டி யருளே
தானஇரு டிப்பட்டி ஞானம்அருள் குருநாத
சப்பாணி கொட்டி யருளே. 4

35. ஞானம்எனும் ஒருபொருள் கொடேசெய்த உருவம்என
ஞாலமிசை வந்த மகவே
நான்மறையின் முதலிலே நடுவிலே முடிவிலே
நாதாந்த மாம்விண் ணிலே
தானமொடு தவம்விரத மாதிபுரி மெய்யன்பர்
தம்திரு வுளத் [2]தளியிலே
தமிழ்மதுரை நகரிலே வைகைதென் கரையிலே
தண்பொதிகை யின்குகை யிலே
மோனநிலை தன்னிலே மூலஅனல் ஒளியிலே
முத்தமிழ் முழங்(கு) ஒலியிலே
மொழிவதற் கரிய அருளழகோடு திகழ்பகவ
மூதுலகில் அன்பர் அருகில்

---

[1]நசை—விருப்பம். [2]தளி—கோயில்.

ஊனம்அணு வேனும்அணு காதபடி கொட்டியருள்
ஒண்கையால் சப்பாணியே
உயரும்இரு டிப்பட்டி வருகுரவ கொட்டியருள்
ஒண்கையால் சப்பாணியே. 5

36. [1]ஆரணமும் ஏனைஅருள் நூல்களும் உரைக்கும்வணம்
அவனிமிசை குருஉருவ மாய்
அழகுமிகு குழவியென வருநினைக் கண்டுபே
ரானந்தம் எய்தி யுள்ளோம்

காரணம் எனத்திகழ்ந்(து) ஒருமூவ ரைத்தந்து
காசினியும் ஏனை உலகும்
கருணையொ டளித்(து)உயிர்த் தொகையையும் [அளித்தினிது
காத்தருள் செயும் கணேசன்

நாரணனும் நான்முகனும் இந்திரனும் அமரர்களும்
நாரதா தியரும் ஏத்த
நடனசபை யினில்நடன மாடியருள் கோலத்தை
ஞானவிழி கொண்டு கண்டே

தாரணியி னில்தாள மிடுதல்போல் [2]அங்கையால்
சப்பாணி கொட்டி யருளே
சாந்தஇரு டிப்பட்டி போந்தஒரு குருநாத
சப்பாணி கொட்டி யருளே. 6

[வேறு]

37. பூதல மீதினில் ஓருரு எய்திப்
போந்த பயன் பெறவே
புனிதசன் மார்க்கம் இருக்கவும் மாந்தர்கள்
பொல்லா நெறி ஏகிச்

சாதலும் மீண்டு பிறத்தலு மாகச்
சகடத் துருள் போலே
சங்கட முறுவது கண்(டு)அரு ளாளர்கள்
சாற்றிடும் உரைகள் எலாம்

போதனை யென்றுட் கொண்டொழு காமற்
புரைமிகு நெறி சாரும்
புல்லரும் நல்லருள் நெறிசார்ந் துய்யப்
போந்திடுவீர் எனவே

---

[1] ஆரணம்—வேதம். [2] அங்கை—அம் கை—அழகிய கை.

கோதறு தீட்சை செயற்குறு கைகொடு
கொட்டுக சப்பாணி
குறைதவிர் இருடிப் பட்டியில் வருகுரு
கொட்டுக சப்பாணி. 7

38. பூமக ளார்மரு மகனு கப்பொலி
புனித கணேசன் அருள்
பூரண மாயிவண் வந்த தெனப்பொலி
புங்கவ னும் குரவ
நாமமும் உருவமும் மேவிடு புவிமிசை
நண்ணிடும் உயிர்கள் எலாம்
நன்மைகள் தீமைகள் மாறியும் மாறியும்
நாடுதல் பேசல் செயல்
சேம முறற்காமோ? இவை தீதும்
செய்திடு மேஎன் னச்
சிந்தித்(து) அவர்களின் வினைகள் அனைத்தும்
தீர்த்தருள் செய்வது போல்
கோமள எழில்மிகு செங்கைகள் சேர்த்துக்
கொட்டுக சப்பாணி
குண நலம் மிகும் இருடிப் பட்டிக் குரு
கொட்டுக சப்பாணி. 8

[வேறு]

39. அவனிமிசை வாழ்உயிர்கள் அறநெறியும் உள்ளன்பும்
அருளறிவும் எய்தி உய்ய
அறுபத்து நான்குதிரு விளையாடல் மதுரையினில்
ஆண்டவன் இயற்றியுள் ளான்
அவநெறி மிகுந்துநல் தவநெறியும் மெய்யன்பும்
அருகிவரல் கண்(டு) உடையவன்
அறுபத்தொ டைந்தாவ தானதிரு விளையாடல்
ஆற்றிடக் கருதி நம்மைச்
சிவவொளி மிகும்கூடல் நகருக் கழைத்துத்
திருக்காட்சி தரவும் எழிலார்
தென்பொதிகை யில்தவநல் விளைவருள வும்தூய
திருநெறி உணர்த்தவும் எணிக்
குவலயத் துக்கனுப் பினன்என்ன மகிழ்தல்போல்
கொட்டியருள் சப்பாணியே
கோதில்இரு டிப்பட்டி ஆதிகுரு நாதமுநி
கொட்டியருள் சப்பாணியே. 9

[வேறு]

40. கனிகள் நிறைய உளபோதும்
காயைத் தின்னக் கவருவ(து) ஏன்?
கரைசேர் மார்க்கந் தனைக்காட்டிக்
கருணை புரியப் போந்துள்ளோம்
இனியும் பலவா(று) அலையாமல்
இன்னல் பலவுற்(று) அயராமல்
இன்பம் தருநல் அருள் நெறியில்
இனிதே சேர்ந்து நலம் பெறலாம்
[1]துனியும் விலகும் நோய் அகலும்
சூழும் பிறவிப் பிணி தொலையும்
சுற்றம் சூழப் போந்(து) அருளார்
தூய நெறிகைக் கொள்மின் என
இனி(து)அன் போடே அழைத்தி டல்போல்
இறைவா கொட்டாய் சப்பாணி
இருடிப் பட்டிப் பதிவரும்அன்
பெழிலே கொட்டாய் சப்பாணி. 10

## 5. முத்தப் பருவம்

41. [2]மதிஎழிலி சிப்பிமீன் ஆவானை பன்றிப்பல்
வாழை தாமரை உடும்பு
வளைகழைநெல் கமுகுவேய் நந்தரவம் முதலை[3]பகம்
மங்கையர் கழுத்து நல்கும்
அதிவிலைகொள் முத்தமும்நின் அருள்வாயின் முத்தம்
ஆகுமோ? [4]ஆல வாயில் [நிகர்
ஐங்கரன் உருக்கண் டுணந்துமகிழ் வுற்றினி(து)
அருட்பாடல் பாடும்நின் வாய்;
புதிதுபுதி தாகவரும் அன்பர்களும் அடியரும்
புனிதநெறி பழகு பவரும்
பொலிவுமிகு நிட்டையில் நிலைப்பவரும் நோன்புபல
புரிபவரும் இனிது மகிழக்
கதிதர உதித்தஒரு கர்த்தனே! முத்தனே!
கனிவாயின் முத்தம் அருளே!
[5]கவினும்இரு டிப்பட்டி கவினவரு குருநாத!
கனிவாயின் முத்தம் அருளே. 1

---

[1] துனி—துன்பம்.
[2] வரி 1—4. முத்துப் பிறக்கும் இடங்கள்—20.
[3] பகம்—கொக்கு. [4] ஆலவாய்—மதுரை.
[5] கவினும்—அழகுடைய.

42. அருள்மணம் கமழும்வாய் என்றுபெரி யோர்சொல்ல
அடியேங்கள் கேட்ட தன்றி,
அவனிமிசை இன்னமும் கண்டிலோம்; இன்று, பே
ரருளாள நினைநாடி னேம்;

இருள்விலக ஒளிவளர [1]இன்னல்அற இன்பமுற
இகபர சுகங்கள் வளர
இருவினைமு(ம்) மலம்விலக அருள்ஞானம் ஓங்க,ஏ
ழிசைஞான வளமும் ஓங்கப்

பொருளும்நிறை புகழும்மிகு [2]பொறையும்மெய்ப்
புனிதமும் பெருகி ஓங்கப் [பொலிவும்உயர்
புவியில்அழ கோடுவரும் மெய்ஞ்ஞான குருநாத
போகமொடு போதம் உதவி

மருளற அருள்புரிந்(து) இணையிலாக் கருணையொடு
மலர்வாயின் முத்தம் அருளே
மகிழும்இரு டிப்பட்டி முகிழவரு குருநாத
மலர் வாயின் முத்தம் அருளே. 2

43. கருதரிய பொருளெலாம் கரமொரைந் துடைமுனேன்
கருணையுரு என்று ணர்த்திக்
கடிநகர மாம்மதுரை தனில்வைகை மாநதிக்
கரையில் அருளொளி விளக்கிச்

[3]சுருதிமுதல் நடுமுடிவில் அமையுண்மை உலகில்
துலக்கி யொளிர் தூய மணியே
துரியவள நாட்டில் அருளரசாட்சி புரிகின்ற
சோடசாந்தச் சோதியே

தருதியென உடலாவி பொருள்பெற்(று) அருள்திருச்
சட்டம் கொடுத் தருளவும்

தக்கசுகம் நல்கவும் பக்குவம் அளிக்கவும்
சாந்தியமு(து) இனி(து) ஊட்டவும்

[4]பருதியென நிலமிசை உதித்தஒரு குருநாத
பவளவாய் முத்தம் அருளே
பல்வளம் செறியும் இருடிப்பட்டி வருநாத
பவளவாய் முத்தம் அருளே. 3

---

[1]இன்னலற—துன்பம் நீங்க. [2]பொறை—பொறுமை.

[3]சுருதி—வேதம். [4]பருதி - சூரியன்.

44. பணியாவு மேஅருட் பணியாக இந்தநற்
பார்மீ(து) உதித்தரு ளிணே
பகையோடு பவம்ஓட அருள்நீ(று) அளித்துதவு
பகவன்என வந்தரு ளிணே
அணியோடு சொல்பொருள் அணைத்தும்மிக வேதிரு
அருட்பாடல் பல பாடவும்
அருள்நிட்டை பேணியே தவநிறைவு பெறுமா(று)
அருட்சட்ட நெறி நல்கவும்
பிணியாவும் நீக்கவும் பிறவிநோய் தீர்க்கவும்
பேறெலாம் இனிதரு ளவும்
பிழைகள் மன்னிக்கவும் கருணைமழை பொழியவும்
பேரின்ப வாழ்வரு ளவும்
மணியாக அடியார்க ளைச்சேர்க்க வும்வந்த
மணியேநன் முத்தம் அருளே
மாசில்இரு டிப்பட்டி வாசமுறு குருநாத
மணிவாயின் முத்தம் அருளே. 4

45. பன்னரிய திருவருட் பண்புமிகு மேனியொடு
பார்மீ துதித்தி லங்கும்
பரமநீ சிறி(து)எமைப் பரிசிப்பின் அஃதெங்கள்
பாக்கியம் எனக்கருது வோம்
உன்னரிய தெய்விகப் பேரொளியை உலகினில்
உவப்பொடு பரப்ப வந்த
ஒப்பற்ற பேரருட் கருணைபொழி விழிகள், மதி
யொளிமிக்க இன்ப வதனம்
சொன்னம்நிகர் குணம்அழகு தயவுபொறை திருவருள்
சுரந்தூட்டும் நோக்கம் எல்லாம்
துலங்கும்ஒரு குழவிநின் அருட்பெருமை நாவினுல்
சொலல்அரிது சொலல்அரிது காண்
முன்னம்எவ ரும்கண்டி லாதநெறி தருகுரவ
முத்தம் கொடுத்தருள் கவே
முத்தமிழ் முழங்கும்இரு டிப்பட்டி மூதறிஞ
முத்தம் கொடுத்தருள் கவே. 5

46. முகமதியின் அழகுகண்(டு) அருள்நாடி வந்துளோம்
முத்தம் கொடுத்தருள் கவே
முதுமறையொ(டு) அருள்நூல் பிழிந்தரஸம்
முத்தம் கொடுத்தருள் கவே [உதவுபவ

*முகடுமுகில் தவழ்பொதிகை தனில்நோற்க வருகுரவ
முத்தம் கொடுத்தருள் கவே
மும்மைமலம் அகலஒரு செம்மைநெறி நல்குபவ
முத்தம் கொடுத்தருள் கவே

முகமன்ஒரு சிறிதும்விழை யா(து) அருள் வழங்குபவ
முத்தம் கொடுத்தருள் கவே
முத்தர்பல சித்தர்மிகு பத்தர்பர வும்பகவ
முத்தம் கொடுத்தருள் கவே

முகரஅரி தானதிரு வருள்மணம் கமழும்வாய்
முத்தம் கொடுத்தருள் கவே
முகைஅவிழும் மலர்செறியும் இருடிநகர் அமர்பரம
முத்தம் கொடுத்தருள் கவே. 6

[வேறு]

47. [1]ஓதனம் உண்ணல் உறங்குதல் தொழில்அல
உயர்பிற விப்பயனை
உன்னி உணர்ந்(து)உயர் செயபுரி கென்ன
உணர்த்த உதித்தரு ளும்

மாதவ நின்னருள் வருகை அறிந்து
மகிழ்ந்து குளிர்ந்தனம் எம்
[2]மயலற வினையற இடர்அற மிகுபிணி
வகையற நலம் வளரச்

சாதக மானநல் அருள்நெறி ஒன்று
தரத்திரு வருள்உரு வாய்த்
தரணியில் வரும்நினை விண்ணவர் ஏத்துவர்
சதுர்மறை யும்பரவும்

[3]மோதக பாணியின் அருள்நிறை புங்கவ
முத்தம் அளித்தரு ளே
முத்தமிழ் இருடிப் பட்டிக் குருபர
முத்தம் அளித்தரு ளே. 7

48. புதுயுகம் ஒன்று படைத்திட வந்தவ
புன்மைகள் போய் அகலப்
பூரண ஜோதி விளங்கிட உத்தம
பூஜை நலம் குலவப்

---

*முகடு—சிகரம்.

[1]ஓதனம்—சோறு. [2]மயல்—மயக்கம். [3]மோதகபாணி—கொழுக்கட்டையைக் கையில் தாங்கிய விநாயகர்.

பொதுநெறி கண்(டு) உலகுக்கரு ளற்குறு
புலவ புராதன சிற்
பொலிவு மிகுந்தமை புண்ணிய எண்ணிய
போதுத வும்குர வ
*விதுநிகர் வதனமும் விழிபொழி கருணையும்
விமல நன் மொழியமு தும்
வியனரு ளுருவமும் விழிகொடு கண்டிரு
வினைதவிர் வாழ்வுடை யேம்
முதுமறை மொழியும்நின் மழலைக்(கு) இணையல;
முத்தம் அளித்தரு ளே
முற்பட் டொளிர்இரு டிப்பட் டியர்பதி!
முத்தம் அளித்தரு ளே. 8

49. வித்தினி லேமுளை யினிலே அதுதரும்
வினைவை அறிந்திட லாம்
விளையா டும்பொழு தேஉயர் வாழ்வின்
விளக்கம் உணர்ந்திட லாம்
பத்தியும் ஞானமும் ஓங்கப் போலி
பகட்டு நலிந்தொழி யப்
பாரினில் சீரிய தாம்ஒரு செந்நெறி
பரவ நலம்குல வச்
சித்தி அனைத்தும் மிகுந்து விளங்கச்
செம்மை அடக்கம் மிகச்
சிறுமைகள் விலகத் திறமைகள் மலியத்
தெய்விக மேமலர
முத்தி நலம்தர வந்த குணகர
முத்தம் அளித்தரு ளே
மூதறி வார்இரு டிப்பட்டிக் குரு
முத்தம் அளித்தரு ளே. 9

50. முன்னவும் மொழியவும் அரிய சிறப்புடை
மூல மறை ப்ரணவம்
முத்திஎண் சித்தி வழங்கிடும் என்பவ
முத்தம் அளித்தருளே
முன்னவன் உருவினை வைகைக் கரையினில்
முழுமகிழ் வொடுகண் டே
மொழிஉண ர்வின்றித் தழுவி உவப்பவ
முத்தம் அளித்தரு ளே

*விது—சந்திரன்.

முன்னழ கோடுபின் அழகும் காட்டுக
மொழிகநின் மழலை யெலாம்
முகமலர் தனிலுறு முகையவிழ் மலரிதழ்
முத்தம் அளித்தரு ளே
முன்னை எம் வினைகள் ஒழித்தருள் குருபர
முத்தம் அளித்தரு ளே
முத்தமிழ் இருடி நகர்த்தனி முநிவர
முத்தம் அளித்தரு ளே. 10

## 6. வருகைப் பருவம்

51. உயர்வர உயர்ந்தஒரு சிவஞான முநிவருக
ஓங்கார நாத வருக
உண்மையன் புடைஅடியர் உள்ளமலர்
ஒளிரும் உபசாந்த வருக [மீதமர்ந்(து)
[1]மயர்வற விளங்குமதி நலம்உதவி யருள்சுப்ர
மணிய குருநாத வருக
[2]மர்க்கடப் பிடிஅறிகி லார்க்கும் [3]மார்ச் சாலமெனும்
மார்க்கம் அருள் நாதவருக
துயர்அகல மகிழ்வுமிக உயர்அருட் சட்டம்
சொலித் தினமும் ஒழுக வைத்துத்
துணையாய் இருந்(து)அருள் சுரந்துகாப் பாற்றுபர
துரியசுக ஜோதி வருக
அயர்வற உழைப்பவர்கள் வாழும்இரு டிப்பட்டி
அமல நாயக வருகவே
அண்ணல்இரு டிப்பட்டி ஸாமிதுணை என்றுவாழ்
அடியர் நாயக வருகவே. 1

52. தேகாதி கரணங்கள் யாவுமே அர்ப்பணம்
செய்துன்அருள் நாடு பவர்தம்
தீராவல் வினையெலாம் தீர்த்தருள்செய் திருநீறு
தீர்த்தம் இனிதே வழங்கி
மாகாதல் நல்கி, அருள் வாழ்வுதவி, நன்றேம்பும்
மாசில் ஆசார்ய வருக
மனமொழிமெய் முத்தூய்மை எய்திடநல் ஓமென்னும்
மறைஅருள் உதார வருக

---

[1]மயர்வற—அறியாமை நீங்க. [2]மர்க்கடம்—குரங்கு.
[3]மார்ச்சாலம்—பூனை.

ஆகார நியமங்கள் காட்டி அற்புதமாக
ஆளும் நாயகவருக ஆ
ருதார* கமலத்தில் ஐம்பத்தொ ரட்சரமும்
ஆகியமர் அழக வருக

பாகாக உருகன்பர் பரவும்இரு டியர்பட்டி
பயிலும் ஒரு பரம வருக
பத்திமிகு சத்திபல சித்திபர முத்திஅருள்
பாத பங்கய வருகவே. 2

53. மறைநான்கும் ஆகமமும் அறுபத்து நாற்கலையும்
மாபுகழ்கொள் தமிழ்மறை களும்
மருவுபல மதசமய நூல்யாவும் நவில்ஸாரம்
மன்னும்ஒரு சட்டம் உதவித்

துறைகாட்டி அடியார் குழாம்சேர்க்க வருஞான
ஜோதியொளி நாத வருக
துயர்யாவும் நீக்கிச் சுகம்பெற அழைக்கின்ற
தூயபர மார்த்த வருக

பொறைகூட்டி நிறைகூட்டி அருளூட்டி அமுதூட்டு
போதகு சிரிய வருக
புகழ்கூட்டி இகழோட்டி மகிழ்வூட்டு வழிகாட்டு
புனிதசித் தாந்த வருக

கறையோட்டி முறைகாட்டும் இருடியார் பட்டிவரு
கருணை நாயக வருகவே
கமலபத மிசைஇன்ப எழிலோடி னருள்மணம்
கமழும் நாயக வருகவே. 3

54. வேதாந்த விண்ணினில் விளங்கு[1]தின கரவருக
விமலமதி யமுத வருக
வித்தகருள் மெத்தநலம் அருள்மூல வொளிவருக
[2]விபுல! ஆநந்த! வருக

நாதாந்த சபையில்நடம் ஆடும்நா யகவருக
[3]நடலைதவிர் நாத வருக
நாமஉரு வம்கடந் தொளிர்பரம பதநாத
[4]நவைதவிர் சுபோத வருக

---

*ஆருதாரம்—ஆறு ஆதாரம்—மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை.

[1]தினகரன்—சூரியன். [2]விபுலன்—பெருமைமிக்கோன்.
[3]நடலை—துன்பம். [4]நவை—குற்றம்.

போதாந்த வீட்டினில் பொற்புற அமர்ந்தருள்செய்
பூரணு கார வருக
பொருள்நாத அருள்நாத பொறைநாத புகழ்நாத
போகசுக நாத வருக
பாதாந்த கேசாதி அருளுடைய பாலகண
பதிகருணை யே வருகவே
பட்டிகளுள் உயர்பட்டி பழையஇரு டியர்பட்டி
பரவும்ஒரு குருவரு கவே. 4

55. ஆதாரம் ஆகிஉல கத்தனையும் இனிதாளும்
அற்புத விநோத வருக
அகமருவு சுகவருக இகமோடு பரம்உதவும்
அமரசிவ குமர வருக
பாதாதி கேசபரி யந்தம்மெய் யன்பெனும்
பண்புடைய பால வருக
பகரரிய புகழொளி பரப்பும்ஒரு சேய்வருக
பயிலும்மதி வதன வருக
பாதார விந்தமலர் தாங்கிடத் தவம்மிகப்
பண்ணினேம் என வுரைத்துப்
பார்மாது மகிழநடை பழகும்இரு டிப்பதிப்
பரமகுரு நாத வருக
காதார ஓம்எனக்(கு) அருளும் நாயகவருக
கருணையமு தருள வருக
கலகல எனக்கழல் ஒலித்திடமெய் அருள்மணம்
கமழ்பதாம் புயவரு கவே. 5

56. ஆசா பிசாசத்தை அடியொடு தொலைக்கமெய்
யன்பு வித்(து) ஊன்றி யருள
அவனிமிசை திருவருட் சட்டநெறி நல்கவரும்
அமுதமொழி மதலை வருக
[1]வாசா கயிங்கரியம் ஒருபயனும் உதவாது
வண்மைமிகு செயல்புரி கென
வழிகாட்டும் வான்பொருள தாப்போந்த சேய்வருக
வரம் உதவு பரம வருக
[2]தாசானு தாசன்என அடியவர் குழாம்பரவு
ஸத்வகுண போத வருக
தடையற அருட்சச்சி தானந்த ஒளிகாட்டு
தத்துவா தீத வருக

---

[1]வாசா கயிங்கரியம்—வெறும் வாய்ப்பேச்சு.
[2]தாசானுதாசன்—அடியார்க்கு அடியன்.

மாசான தணுவும்அணு காதஇரு டிப்பட்டி
வருசாந்த முநிவ வருக
வாழையடி வாழையென மருவும்அடி யவர்குழாம்
வளரவரு சேய்வரு கவே. 6

57. அருளழகு பொழியும்வடி வுடைய பாலக வருக
ஆசிரியர் தலைவ வருக
அமுதநிலை அமுதகுணம் அமுதனைய செயலாற்றல்
அமையஅருள் அமுத வருக
பொருளழகு புகழழகு பொறையழகு நிறையழகு
பொலியவொளிர் புனித வருக
போதபர நாதசுக போகம்உத வும்பசும்
பொற்சோதி உருவ வருக
[1]தெருள்அருள்க எனஅடியர் குழு[2]சந்த தம்போற்று
சீல மறைமூல வருக
திங்கள்கதிர் [3]அங்கிஇவை ஒன்றுமிடம் நன்றுதிகழ்
தீர தவவீர வருக
இருள்அணுவும் அணுகொணு இருடிநகர் தன்னில்வரும்
எங்கள் குருநாத வருக
இதயபரி பாகம்மிக எய்தஅருள் செய்தருளும்
இனியநா யகவரு கவே. 7

58. [தனன தனன தனனதனன, தனனதனன தனதனு]
கலைகள் பலவும் நொடியில் உதவு
கமல நயன வருகவே
கருணை யமுது பொழியும் இனிய
[4]ககன சுரபி வருகவே
அலைகொள் பிறவி தவிர உதவும்
அமல மதலை வருகவே
அவனி உயிர்கள் துயரம் அகல
அருள்செய் குழவி வருகவே
நிலைகொள் மனதில் ஒளிகொள் உருவில்
நிலவும் நிருப வருகவே
[5]நிகில புவன [6]நிரையை நினைவில்
நிறுவும் நிபுண வருகவே

---

[1]தெருள்—தெளிவு. [2]சந்ததம்—எப்போதும்.
[3]அங்கி—அக்கினி.
[4]ககனசுரபி—தெய்வலோகக் காமதேநு.
[5]நிகிலம்—எல்லாம். [6]நிரை—வரிசை.

புலைகள் களவு தவிர நெறிசொல்
புனித உருவ வருகவே
பொலியும் இருடி நகரில் மருவு
புலவர் தலைவ வருகவே. 8

59. உருவில் அருவில் ஒளியில் ஒலியில்
உறையும் ஒருவ வருகவே
உகர அகர மகர நடுவில்
ஒளிரும் உருவ வருகவே
திருவும் அளவில் புகழும் இனிது
திகழும் நியம வருகவே
திறமை செழுமை அருமை பெருமை
* சிவணு மதலை வருகவே
கருவில் உறுதல் தவிர உதவு
கடவுள் வடிவ வருகவே
கடமை புரியு முறைசொல் குரவ
கமல சரண வருகவே
மருவும் அடியர் இதய மலரில்
வதியு மகிழ்ந வருகவே
மதுர இருடி நகரில் நிலவும்
மலைவில் தலைவ வருகவே. 9

[வேறு]

60. †காலை உதய பானு அனைய
கருணை யொளிகொள் வடிவனே
கமழும் மலர்கள் கணபதி மிசை
கனிவுடனிடும் அழகனே
மூலை நோக்கிப் பணியும் அறிஞ
மோன வானை நோக்கியே
முகிழ்கை கூப்பித் தொழுகை புரியும்
‡முருகு கமழும் உருவனே
வேலை அழுகை சிரிப்பு குதிப்பு
விமலர் பூசை அறைக்குளே
விரும்பிப் புகுதல் தனித்துள் அமர்தல்;
வேறு நாடா விரதனே

---

*சிவணும்—பொருந்தும்.

†சுவாமிகள் குழந்தைப் பருவத்தில் செய்த செயல்கள் என வரலாற்றில் உள்ளவை இங்கு குறிக்கப் பெற்றுள்ளன.

‡முருகு—அழகு, இளமை, தெய்வத்தன்மை.

ஆலேக் கரும்பின் சாறும் அமுதும்
அணைய இனிய வருகவே
அமல இருடி நகரில் வரும்எம்
அமுத கிரண வருகவே. 10

## 7. அம்புலிப் பருவம்

[சாமம்]

61. அவனிமிசை யுறும்இருள் தவிர்ப்பைநீ, இவன் உலகின்
அறியாமை இருள் நீக் குவன்;
[1]அவிரொளியை உலகுக்(கு) அளிப்பைநீ, இவன்
அருளொளி பரப்பி ஒளிர்வன்; [உலகில்
புவனியைத் தண்ணிலவி ஞற்குளிர வைப்பை, இவன்
புகலரிய அருளுரை களால்
புந்திகுளிர் விப்பன்; அமுதருள்வைநீ, இவனு(ம்)மதி
பொழியமு தளித்துத வுவன்
[2]குவடுடைய மலேகளில் உலாவுவை, இவன்திருக்
குற்ருல மலேயுல வுவன்;
குரைகட லமிழ்ந்தெழுவை, இவன் அருட்கடலிற்
குளித் தெழுவன்; ஆதலாலே
தவமுடையை நீயும்என எணிஅழைக் கின்றனன்;
தண்மதீ ஆட வாவே
தமிழகத்(து) இருடிநகர் அமிழ்த குரு நாதனெடு
தண்மதீ ஆட வாவே. 1

62. நினக்(கு)*இனன் அளிக்கும்ஒளி யைத்தினமும்
நீளுலகி னுக்கருள்வை நீ [மகிழ்வோடு
நினக்குற்ற குறைநீக்க எண் ணுமல் உலகுக்கு
நிறையொளி அளிப்பை; இவனும்
தனக்(கு)இறை அளித்தஅரு ளொளியைஉல குக்குத்
தயா நிறைவினுல் அளிப்பன்
தனக்கென்ன எதுவுமே தேடாது நாடாது
தாரணிக் குதவி யருள்வன்;
கனக்கிரண வட்டமாம் ப்ரபை யுடையை நீ,இவன்
கருணேமிகு கிரண நிரையால்
கவின்மிக்க வட்ட நற் ப்ரபையுடையன்; ஆதலால்
களிகூர விளேயாடிட

[1]அவிர்—பிரகாசிக்கின்ற. [2] குவடு—சிகரம்.
*இனன்—சூரியன்.

*மனக்கினிய துணைவன்என் றெணிஅழைக் கின்றனன்
மதியமே ஆட வாவே
மகிழ்வருளும் இருடிநகர் முகிழ்செய்குரு நாதனுடன்
மதியமே ஆட வாவே. 2

63. [1]புந்தியைத் தருவைநீ, இவன்அருளை விழைகின்ற
புந்தி உலகுக்கரு ளுவன் ;
பூங்குவளை யிணையலர்த் துவை, அடியர் விழியெனும்
பூக்களை யலர்த்துவன் இவன் ;
வந்தெழில் தாமரைநன் மலர்குவிய வைப்பை, இவன்
வண்பதத் தன்பர் சொரியும்
மலர்குவிய வைப்பன்; வானிற்குலா வுவை,ஞான
வானிற் குலாவுவன் இவன் ;
[2]அந்திவண் ணக்கடவுள் திருவடி வணங்கி அவன்
அருளெய்தி ஒளிர்வை; இவனும்
அந்திவண் ணத்தந்தி முகன் அருளின் உருவமாய்
அவனிமிசை மிளிர்வன்; அதனால்
சிந்தைமகிழ் வோடுவிளை யாடவரு கென்றனன்
திங்களே ஆட வாவே
திருவளரும் இருடிநகர் மருவுகுரு நாதனொடு
திங்களே ஆட வாவே. 3

[பேதம்]

64. ஒளிதேயும் நிலையும்ஒன் றுடையைநீ; இவன்அ(வ்)வித
ஊனம்அணு வேனும் இல்லான் ;
ஒவ்வொரு தினத்திலும்நின் நிலைமைமா றிடும்,இவன்
உகம்புரண் டாலும் மாறுன் :
ஒளிருமதி மண்டலம்நின் முழுவுருவம் ஆகும், இவன்
உயர்வடிவில் ஒருசிறிதிடம்
ஒப்பில்மதி மண்டலம் எனத்திகழ்ந் தெண்ணிலா
உலகுக்கும் ஒளியுத விடும் ;
மிளிருநின் ஹௌளி தீமை செய் வோர்க்கும் உதவும்,இவன்
மேன்மைசால் திருவரு ளொளி
விழுமியமெய் அன்பர்க்கு மட்டுமே மிகவுதவும்;
மெய்ம்மையீ(து) உன்தவத்தால்

---

*மனக்கினிய—மனத்துக்கு இனிய.

[1]புந்தி—புதன். [2]அந்திவண்ணக் கடவுள்—சிவன்.

*அளிமிகுந் தினிதுவிளை யாடிட அழைத்துளான்
அம்புலீ ஆட வாவே
அருள்பெருகும் இருடிநகர் அமலகுரு நாதனுடன்
அம்புலீ ஆட வாவே. 4

65. ஆயிர இதழ்க்கமல மலரும்இவன் அருளொளியில்
அணுவளவு படமல ருமே,
அவனிமிசை நூறிதழ்க் கமலமும்நின் வரவு கண்(டு)
அயர்வுற் றுடன் குவியுமே;
தீயவரு மேஇவன் திருவருட் பார்வையில்
திருந்திநல் லோர்க ளாவர்,
தீயவரில் ஒருவரும்நின் வரவுகண் டினிதே
திருந்திடார்; இவனை நன்றே
ஆயிரங் கண்ணிந்தி ரன்போற்றி மகிழ்வன், அவன்
ஆணையின் கீழுளாய் நீ;
அவமாயை யாம்மேகம் இவனை யணுகா(து), உனை
அடிக்கடியும் முகில் மறைக்கும்;
தூயநின் புண்ணியத் தால்இவன் அழைத்தனன்
சோம நீ ஆட வாவே
சுகம்உதவும் இருடிநகர் நிகரில்குரு நாதனொடு
சோம நீ ஆட வாவே. 5

66. தோடம்அணு வேனும்இவ னைத்தொடற் கியலாது,
சொல்லிடும் க்ரஹண தோடம்
தூயநின் னைப்பற்றி ஒளிகுறைத் திடுமே;
சொலற்கரிய சித்துரு வினில்
நாடொறும் இவன்பொலிவன், இவனடித் தொண்டர்
நற்சித் துருக் கொண் டவர், [களும்
நானிலத் தவர்உனைச் சடமென்பர்; இவன்என்றும்
ஞானசுக மாய்த்திக ழுவன்,
நாடறியும் ஆண்டில்நீ பலநாள் இராய்என்ன;
நான்இனிச் சொல்வதென் னே?
நற்றவம் மிகச்செய்து ளாய்போலும், விளையாட
நன்றழைக் கின்றனன் உனை
ஈடிணை யிலாததிரு விளையாடல் செய்பவனொ(டு)
†இந்துவே ஆட வாவே
இன்பமிகும் இருடிநகர் அன்பர்குரு நாதனுடன்
இந்துவே ஆட வாவே. 6

---

*அளி—அன்பு. †இந்து—சந்திரன்.

[தானம்]

67. பற்பல குறையுடை யவரும் இவன்சொற்
படியே ஒழுகி உயர்
பயனுறுவார், நின் குறையற மாசும்
பற்றற் றெளி தகல
நற்பரி வோடிவன் சொற்படி வந்திடு
நலமிக வும்பெறலாம்
ஞானவொ ளிப்ரபை யோடுமெய் யன்பெனும்
நல்லமு தும்பெற லாம்
*பொற்பமை திருநீ றேற்றுன் னுருவிற்
பூசிற் குறை யகலும்
புனிதமிகும் தீர்த் தம்பெற் றுட்கொளின்
பொல்லா மாசக லும்
†வற்பமை நிலையிலிவ் வள்ளலொ டாடிட
வாவா அம்புலி யே
மன்னிரு டிப்பட் டிக்குரு அருகினில்
வாவா அம்புலியே. 7

[வேறு]

68. தண்ணீரில் நனிமூழ்கி யும்மருந் துண்ணுது
சன்மார்க்க மாய் ஒழு கியும்
தக்கவழி பாடாற்று வோர்இந்த அண்ணல் அருள்
சட்டத்தில் மற்றவை யெலாம்
உண்ணீர்மை யால்இவன் அருட்கருணை யால்
ஒப்பில் நலம் எய்தி வாழ்வார், [உணர்ந்(து)
ஓங்கார நாதம்அவர் உள்ளிலகும் மெய்யன்பும்
உயர்இன்ப மும்பெரு கிடும்;
தண்ணீரில் நீநாளும் மூழ்குவதொ டவுடதம்
சற்றும்நுக ராமை யோதிச்
சட்டநெறி நுட்பமும் மற்றவிவ ரங்களும்
தக்கபடி கற்றுய் யலாம்;
தெண்ணீர்மை யோடும்இத் தேசிகன் அழைத்தனன்
செழுமதீ ஆட வாவே
திகழும்இரு டிப்பட்டி வந்தசற் குருவுடன்
செழுமதீ ஆட வாவே. 8

*பொற்பு—பொலிவு.
†வற்பு—உறுதி.

[தண்டம்]

69. சாற்றரி தாகிய சித்தி அனைத்தும்
தன்வச மாக்கி யுளோன்
சகல விதக்கலை நொடியினில் அருளொடு
தக்கவ ருக்கருள் வோன்

நோற்றலி லேஉயர் வருள்பவன் அடியவர்
நோய்தவிர் வீறுடை யோன்
நூதன மாம்நெறி தருபவன் மாறிடின்
நூறிடும் வன்மை யுளோன்

ஆற்றலில் இணையா னவர்இலர் ; நீஇனும்
அறியாய் போலும் ! இவன்
அணுவள வேசினம் எய்தினும் அண்டம்
அனைத்தும் பொடிபடு மாம்

மாற்றமி லாமல்இவ் அண்ணலொ டாடிட
வாவா அம்புலியே
வளர்இரு டிப்பட் டிக்குரு அருகினில்
வாவா அம்புலியே. 9

[வேறு]

70. பன்னரிய மறைமூல மாம்விநா யகனைமுன்
பரிகசித் திடருற் றுளாய்,
பாரினில் விநாயகன் திருவருள் உருக்கொண்டு
பரிவோடு போந்தவன் இவன் ;

முன்னமொரு கால்வீர பத்திர னிடம்சிக்கி
மொழி யொணுத் துயருற் றுளாய்,
முத்தன்இவ னும்வீர பத்திரன் அருட்புதல்வன் ;
முத்தர் திறல் அறிகி லாயோ?

பொன்னுலகர் மண்ணுலகர் மாமுநிவர் நாள்தொறும்
போற்றி இவன் ஏவல் புரிவார்;
புனிதன் இவன்வெகுளான் ; அரைக்கணம்
புகலொணு இடருழப் பாய் ; [வெகுண்டிடின்

அன்னவரும் மிக்கவரும் இல்லாத இவனோடும்
ஆடவா வெண்ணிலா வே
அன்புமிகும் இருடிநகர் என்பொன்மணி யோடுவிளை
யாட வா வெண்ணிலா வே. 10

## 8. சிற்றில் பருவம்

71. வண்ணப் பருதி ஒளியனையாய்
மதிபோல் அமுதம் பொழிமுகத்தாய்
வளஞ்சால் கருணை விழியுடையாய்
மறைபோல் மழலை மொழியுடையாய்

உண்ணத் தகுந்த சுவைச் சிறுசோ
றுடனே சமைத்திங் குனக்கீவோம்
உயர்ந்த இசையால் பலபாடல்
உவந்தே பாடி மகிழ்வளிப்போம்

எண்ணற் கரிய புகழுடையாய்
எண்சித் திகளின் திறலுடையாய்
எழிலார் இருடிப் பட்டிவரும்
இறையே நான்கு மறை முதலே

அண்ணல் பெம்மான் ஆண்டவனே
அடியேம் சிற்றில் அழியேலே
அருமை பெருமை நிறைந்தவனே
அடியேம் சிற்றில் அழியேலே. 1

72. ஓதும் மறையின் பொருள் அனைத்தும்
ஓதா(து) அருளால் உணர்பவனே
உண்மை அறிவா னந்தம் எனும்
ஒளிசேர் உருவொன் றுடையவனே

தீதும் நன்றும் திருத்திடவே
தெய்வப் பொலிவோ டுதித்தவனே
செல்வம் கீர்த்தி செயலாற்றல்
செம்மை இன்பம் கொடுப்பவனே

காதும் கண்ணும் செய்தவத்தால்
கருணை வடிவில் நீ உதித்த
காலம் இதில்யாம் தோன்றி யுளோம்
எனவே கருதிக் களிப்புறுவேம்

யாதும் நலமாய் விளைப்பவனே
எங்கள் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குருபரனே
எங்கள் சிற்றில் சிதையேலே. 2

73. கன்றைப் பேணும் ஆவெனவே
கணக்கில் உயிரைக் காப்பவனே
கருணை மழையைப் பொழிபவனே
கற்கண் டினும் மிக் கினியவனே

இன்றைக் கிருந்து நாளைபோம்
இன்னல் வாழ்வில் தளராமல்
இறைவன் அருட்செந் நெறிபேணி
இன்பம் துய்க்கப் புரிபவனே

ஒன்றை விளக்கும் உத்தமனே
ஓமென் ஞெலியுள் ஒலிப்பவனே
உண்ணப் பலவாம் பலஹாரம்
உவந்தே உனக்கிங் களித்திடுவேம்

என்றும் நலமே விளைப்பவனே
எங்கள் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குருபரனே
எங்கள் சிற்றில் சிதையே லே. 3

74. குமுதம் போலும் விழியுடையாய்
கொடுக்கும் வண்மை மிகவுடையாய்
கோரும் வரம்எல் லாம்தருவாய்
குணக்குன் றனையாய் குயிற்குரலாய்

சுமுகத் தோடே அடியர்முனம்
தோன்றித் திருத்தி அருள்புரிவாய்
ஜோதி வடிவே தூயவனே
சொல்லாய்ப் பொருளாய்த் திகழ்பவனே

சமுகத் தவருக் கருள்நெறியைச்
சாற்றிப் பழக்கித் தயவுடனே
சாந்தம் வழங்கி அவர் உளத்தில்
தழையும் பழைய தமிழ்ச்சுவையே

அமுதத் தினைநேர் இருடிநகர்
அண்ணுல்! சிற்றில் அழியேலே
அருளே உருவாய் உதித்தவனே
அடியேம் சிற்றில் அழியேலே. 4

75. சொல்லற் கரிதாம் சீருடையாய்
தூய்மை கனிந்த மனம் உடையாய்
துரியா தீதச் சுகத்தினையும்
துணிந்தே அடியார்க்(கு) இனிதருள்வாய்

அல்லைத் தொலைத்திங்(கு) அருள் ஒளியை
அளித்தற் கெனநீ போந்துள இவ்
அருளார் யுகத்தில் அடியேமும்
அழகார் தமிழ் நாட்டிற் பிறந்த

*தொல்லைத் தவத்தின் சிறப்பெண்ணித்
தொந்திக் கடவுள் அடிதொழவே
தூய சிறு வீடமைத்(து) அதில் அத்
துதிக்கை இறையை அமைத்துள்ளோம்

எல்லை அறியாப் பெருமையனே
எளியேம் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குருபரனே
எளியேம் சிற்றில் சிதையேலே. 5

76. வெம்மை மிகுந்த செயல் புரிய
விடாமல் அடியார் தமைத்திருத்தி
விளங்கும் பக்தி முறையினையும்
விமல ஞான நிட்டையையும்

செம்மை சிறந்த நெறியதனால்
தெளிவாய் விளக்கும் பெருமையனே
சிந்தை மகிழ்வால் யாம் அமைத்த
சிற்றில் இதனுள் சிறப்புடனே

பொம்மைக் கலியா ணம் செய்யப்
பொருள்கள் யாவும் சேர்த்துள்ளோம்
புனிதா நினக்கும் விருந்தளிப்போம்
பொறுமை யுடனே உள்வருவாய்

இம்மை மறுமைச் சுகந் தருவோய்
எளியேம் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குருபரனே
எளியேம் சிற்றில் சிதையேலே. 6

*தொல்லைத்தவம்—முன்னைத்தவம்.

77. தென்னன் திருநா டிதனிடையே
தெய்வத் தமிழும் செந்நெறியும்
தெருளும் பொருளும் திருவருளின்
திறமும் செறிந்து வளம் கொழிக்கப்

பன்னற் கரிய அரு ளழகு
படைத்துப் போந்த பண்பினனே
பார்மீ(து) உயிர்கள் அனைத்தினையும்
பாலித் தருள உதித்தவனே

உன்னற் கரிய சிறப்புடைய
உயிர்க்குச் சிற்றில் உடலன்றோ?
உடலை உயிரை உட்பொருளை
ஒருங்கே பேண உதித்துள நீ

இன்னல் சிறிதும் செயலாமோ?
எளியேம் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குரு பரனே
எளியேம் சிற்றில் சிதையேலே. 7

78. ஊக்கம் அளித்திவ் வுலகிலுறும்
உயிர்கட்(கு) உண்மை உரைத் தருளி
ஒப்பில் அருட் சட்டம் வழங்கி
உள்ளன் பொடு ஞானமும் ஈந்தே

மோக்கம் எனும் பே ரின்பமுறும்
மோன நிலையைத் தருபவனே
மூல மறையாம் பிரண வம்உள்
முழங்கச் செய்யும் முழுமுதலே

ஆக்கம் தரற்கே வந்தருள் நீ
அழிக்கும் செய்கை செயலாமோ?
அன்பாய்ச் சிறுசோ றட்(டு)* அளிப்போம்
அப்பம் உருண்டை கனியளிப்போம்

ஏக்கம் தவிர்க்கும் இறையவனே
எங்கள் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குரு பரனே
எங்கள் சிற்றில் சிதையேலே. 8

*அட்டு—சமைத்து.

79. கல்லா மனமும் கனியச்செய்
கருணை மிகுந்த திருவாளா
கரும்பின் சுவையே கனிரஸமே
கலக்கம் தவிர்பாற் கடலமுதே

பொல்லா ரையும் நல் லாராக்கப்
புவிமீ(து) உதித்துப் பொலிபவனே
பூக்கள் கொய்திங்(கு) உனக்களிப்போம்
புதிய பதுமை அளித்திடுவோம்

சொல்லால் எவர்க்கும் சொலற்கரிதாம்
ஜோதி யொளியாய்த் திகழ்பவனே
சுவைசால் பணிகா ரமும் தருவோம்
துதிகள் பாடித் தொழுதிடுவோம்

எல்லா உயிர்க்கும் இதம்புரிவோய்
எங்கள் சிற்றில் சிதையேலே
இருடிப் பட்டிக் குருபரனே
எளியேம் சிற்றில் சிதையேலே. 9

80. குழகா ஞானக் குரு பரனே
குற்றம் பொறுக்கும் குணத்தவனே
* கொண்டல் நிகர்க்கும் நின(து) அருளார்
குணங்கள் போற்றி வணங்கிடுவோம்

பழகா தவரும் பழகிஉயப்
பரந்த பார்மேல் சட்டத்தைப்
பரவச் செய்யும் பராபரனே
பக்தி ஞானம் விளைப்பவனே

முழவார் வீதி தனில்ஒருபால்
முறையாய்ச் சிற்றில் அமைத்துள்ளோம்
மூவா முதலே நான்மறையின்
முதலே முடிவே மொழிப்பொருளே

அழகார் இருடிப் பட்டிவரும்
அமரா சிற்றில் அழியேலே
அமலா அதிபா அருளரசே
அடியேம் சிற்றில் அழியேலே. 10

* கொண்டல்—மேகம்.

## 9. சிறுபறைப் பருவம்

81. கல்வியாம் கடலைக் கடைந்தஅமு தினைஒரு
கணத்தில்அருளால்தரு பவ
கணமேனும் ஓயாமல் அடியார்களுக்(கு)அருட்
கருணைபாலிக்கும் இறைவ

நல்வரம்எலாம் உதவு ஞானபரி பூரணனை
நகரமா மதுரை வைகை
நதிக்கரையினிற்கண்(டு) அணைந்துமிக மகிழ்வெய்தி
நாலொடொன் றுன புலனை

வெல்வழியினைக்காட்டு பொதிகைமா மலையினில்
விளங்குதவ நிறைவின் உருவாய்
விரியுலகம் உய்ந்திட அருட்சட்ட நெறிகண்டு
விழுமியர் குழாம் திரட்டிச்

செல்வம்எல் லாம்உதவ வந்த(து)அறி வித்தல்போல்
சிறுபறை முழக்கி யருளே
தேசுமிகும் இருடிநகர் வாசமுறு குருநாத
சிறுபறை முழக்கி யருளே. 1

82. பாண்டிய ந(ன்) னாடுபுரி புண்ணியத் தின்முழுப்
பயனென உதித்த பரமே
பல்லுயிர்களும்துன்ப மின்றிமகி ழக்கருணை
பாலிக்க வல்ல திறமே

* 'பாண்டில்ஓட் டிச்சென்று நல்லஉண வுப்பொருள்கள்
பார்த்துநன் றாக வாங்கிப்
பாங்கொடேற் றிக்கொண்டு பக்கமுறு வோர்க்குறு
பயம்தீர்த்த வண்ணம் வந்து

வேண்டிய பொருள்களைக் கொள்விலைக் கேஇனிது
விற்றுமகி ழப்போந்த னம்
வியனுலகர் இஃதுணர்ந்திடு' கென உணர்த்திட
விளித்திடுதல் போல்அழ குடன்

சேண்திகழும் அருளொளிச் செம்மைமிக வுறுபகவ!
சிறுபறை முழக்கி யருளே
திருவளரும் இருடிநகர் அருளுருவ! குருநாத!
சிறுபறை முழக்கி யருளே. 2

* பாண்டில்—வண்டி.

83. கொழிக்கின்ற பல்வளம் குலவுசெந் தமிழிற்
குளித்துக் களித்து நன்றே
குவலயமும் வானுலகும் ஏனைஉல கங்களும்
குறைவிலா இன்பம் எய்த

விழிக்கின்ற மெய்ஞ்ஞான விழிகொண்டு பெரியோர்
விளம்புதிரு அருள்நூல் களில்
விளங்கிடும் சாரம்எல் லாம்திரட் டித்தர
வியன்புவியில் வந்துள் ளனம்

பழிக்கின்ற செயல்நீத் தருட்சட்ட நெறியிற்
பயின்றுய்ய வருவோ ரெலாம்
பார்மீதில் எங்கிருப் பினும்இங்கு வருகெனப்
பறைசாற்று செயல்புரிதல் போல்

செழிக்கின்ற தெய்விகத் திருவுருவ மோ(டு)இவண்
சிறுபறை முழக்கி யருளே
செல்வமிகும் இருடிநகர் நல்குவர குருநாத
சிறுபறை முழக்கி யருளே. 3

84. சுக்குதிப் பிலியொடு மருத்துவனை நாடாது
ஜோதிவடி வான இறைவன்
துணைகொண்டு பிணிதுயர் அனைத்தும்நீக் கிப்பரம
சுகமெய்து சட்டம் உதவிச்

* சக்குதீக் கையுமான சிகதீக்கை யொடுமத்
தகத்தில்அத் தத்தை வைத்தே
தக்கபடி மெய்ஞ்ஞான நிலைஇவர்க்(கு)
தருதீக்கை யும்செய் குருவே [அமைகெனத்

பக்குவம் மிகுந்திடப் பத்தியம் பற்பல
பகர்ந்தருள் செயும்பர மனே
பரிபக்கு வம்கண்டு மேன்மேலும் அருள்செய்து
பலவாய்ச் செறிந்த கருமச்

சிக்குநீக் கிடவந்த சிவஞான முனிவனே
சிறுபறை முழக்கி யருளே
தெய்விக மிகுந்தஇரு டிப்பட்டி அண்ணலே
சிறுபறை முழக்கி யருளே. 4

---

* வரி 5-8. நேத்ர தீக்ஷை, மானஸ தீக்ஷை, ஸ்பர்ச தீக்ஷை ஆகிய மூவகை தீக்ஷைகளையும் செய்தருளும் குருவே.

85. முந்துறும் வினைகளால் முக்குற்றம் [1] மூன்றுகுணம்
[2] மூவுடலம் [3] மூன்றவத் தை
மும்மைமலம் முதலான வற்ருல் வருத்தமுறும்
மூதுலக உயிர்வகை யெலாம்

[4] சிந்துர முகன்திரு அருட்கருணை பெற்றுயச்
செம்மைசால் சட்டம் உதவும்
தேசிக சிகாமணி சிறப்பெலாம் மிகுமணி
செழுந்தவப் பயனருள்மணி

இந்துமண் டலஅமுதம் இனிதருளும் மணிஎங்கள்
எழுபிறப் போட்டிடு மணி
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும் எங்களுக்(கு)
ஈந்தருளி ஆளும் மணியே!

சிந்துவண் ணம்கும்மி பாடுதெய் வப்புலவ
சிறுபறை முழக்கி யருளே
சிவலோகம் எனஒளிரும் இருடிநகர் அமரும்முனி
சிறுபறை முழக்கி யருளே. 5

86. காயெலாம் கனியெனக் கனிவிக்கும் வள்ளலே
கருணையமு தருள்வள் ளலே
ககனவுல கினர்முநிவர் அன்பர்அடியவர் துதிசெய்
கவின்மிக்க ஒளியுருவனே

நோயெலாம் நீக்கிமிகு வினையெலாம் நீக்கிஉயர்
நோன்மையெல் லாம் வழங்கி
நுட்பம்எல்லாம் விளக் கித்தவப் பொலிவருளும்
நூதன புராதன நினை

வாயெலாம் தித்திக்க மனமெலாம் தித்திக்க
வாழ்த்திவழி படவிழை கிறேம்;
மனமொழிமெய் முத்தூய்மை வாய்த்திட
மாஞான நிலையெய் திடச் [நலம்பெருக

சேயெலாம் வருகெனச் செப்பல்போல் இனி(து)இவண்
சிறுபறை முழக்கி யருளே
தேவர்உல கெனஒளிரும் இருடிநகர் மேவுகுரு
சிறுபறை முழக்கி யருளே. 9

[1] மூன்று குணம்—ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம். [2] மூவுடலம்—ஸ்தூலதேகம், சூக்ஷ்மதேகம், காரணதேகம். [3] மூன்றவத்தை—நனவு, கனவு, உறக்கம், [4] சிந்துரமுகன்—யானைமுகம் கொண்ட விநாயகர்.

[வேறு]

87. வானமும் வையமும் வாழ்வுற இன்ப
வளம் குலவச் சட்டம்
[1] மாதிரம் எட்டினும் மேவிட அடியவர்
மரபு வளர்ந் திலக

மானவர் குலமுழு துய்ய உதித்தவ!
மலிபிணி துயரம் எலாம்
வண்திரு நீறொடு தீர்த்தத் தால்அற
வாழ்வு சிறக்க அருள்

[2] யானம் இவர்ந்தெங் கெங்கும் பவனிகொள்
ஏகா சாரிய! இங்(கு)
இன்னடியார் குழு திருவரு ளால்நலம்
எய்துதல் காண்க என

மோன சிகாமணி நீசொலல் போல
முழக்குக சிறுபறையே
முருகவிழ் இருடிப் பட்டிக் குரவ!
முழக்குக சிறுபறை யே. 7

88. பழுதுறு வழிகள் பலப்பல வாய்உள,
பார்வாழ் உயிர் வகையைப்
பற்றி இழுத்(து)இன் பம்தரல் போலப்
பலதுன் பத்தாழ்த் தும்;

தொழுது வணங்கி இறைஞ்சிப் போற்றித்
துதிபல வும்பாடித்
தொண்டர் குழாமொடு கூடி மகிழ்ந்து
தொழும்பு புரிந்து மனம்

* இழுதென உருகியும் நிட்டையில் ஆழ்ந்தும்
இயம்பிட அரிய சுகம்
எய்திடலாம்; தடை இலை; என் றன்புடன்
எச்சரிக் கின்றது போல்,

முழுதும்நல் அருள்வடி வாய்வரு குரவ!
முழக்குக சிறுபறையே!
முகைமலர் இருடிப் பட்டிப் பகவ!
முழக்குக சிறுபறை யே. 8

---

[1] மாதிரம்—திசை. [2] அருள் யானம்—அருளாம் விமானம்.
* இழுது—நெய்.

89. மன்னவ ராயினும் மாண்டொழி வார் ; அருள்
மாண்பமை முத்தர் எலாம்
மாளா நெறிபெற லாம்என மேலவர்
மறைமொழி ஓதி டுமே ;

இன்னமும் எவரும் நலம்பெற லாம் ; தடை
இலை ; இதை நன்கறி வீர் ;
இவ்வுல காசையில் இவ்வுடலாசையில்
என்றும் சிக்காதீர் ;

அன்னத் துறும்அயன், [1]புள்ளிவர் மால், வெள்
ளானையில் இவர்[2]மக வான்,
அமரர்கள் முநிவர்கள் பாவலர் நாவலர்
அன்பர்கள் தொழுதேத் தும்

முன்னவன் அருள்பெற வருகெனல் போல
முழக்குக சிறுபறை யே !
[3]முழவதிர் இருடிப் பட்டிக் குரவ !
முழக்குக சிறுபறை யே. 9

90. பொய்யுரை பேசுதல் கொலைகள வாதிய
புரிதல் புலால் உண்ணல்
பொல்லா மதுவுணல் சூதா டுதல்பல
புன்மைச் செயல் புரிதல்

தையலர் காமத் தாழுதல் யாவும்
தவிருதல் வேண்டும் எனச்
சத்தினை யேவிழை நல்லவர் நட்பைச்
சாருதல் பக்தி செயல்

மெய்யுரை யாடுதல் அன்பறம் இன்சொல்
மிகும்பொறை புனித முறல்
மெய்யறி வெய்துதல் குருநெறி பேணுதல்
வேண்டும் எனச் சொலல்போல்

*மொய்யொளி இருடிப் பட்டிக் குரவ !
முழக்குக சிறுபறை யே!
முதுமறை உண்மை உரைத்திடு பகவ !
முழக்குக சிறுபறை யே. 10

---

[1]புள்—கருட வாகனம். [2]மகவான்—இந்திரன்.
[3]முழவு—வாத்தியம்.
*மொய்யொளி—ஒளிமிக்க.

## 10. சிறுதேர்ப் பருவம்

91. [1]மயல்அறி கிலாமனம் குடிகொள்ளும் மறைநாத!
மங்கள மெலாம் உதவவே
மாநிலத் தினில் உதித்(து) இனிதுவளர் பரநாத!
மதிவதன! மலரும் நயன!

அயல்அறி கிலா(து) உன்றன் அடிமலர்த் துணைபற்றி
அளவில்மெய் யன்பி னேடும்
அகிலமீ துன்சட்ட நெறிமுறை யுடன் பேணி
அருள்வாழ்க்கை யினை நடத்தி

[2]உயல்அறி கிலேன்; என்னை உயவைப்ப (து) உன்
உண்மையீ(து) எனமுறையிடும் [பொறுப்(பு)
உள்ளமுறும் ஒப்பிலா உண்மையடி யார்கூறும்
உரை நினைவு செய்கை யாதி

செயல்எலாம் நினதெனக் கொண்டுசெலல் போலஒரு
சிறுதேர் உருட்டியருளே!
திருவிருடி நகர்திகழ வருபரம குருநாத!
சிறுதேர் உருட்டி யருளே. 1

92. மல்லி மிளகாய் துவரை சோளமொடு கம்புகேழ்
வர(கு) உழுந்(து) ஒண்பருத்தி
வளமாக விளைபதியில் வீரபத் ரப்பிள்ளை
மங்கைஆ வுடையம்மை செய்

நல்லநோன் பின்பயன் எனப்போந்து கருணையொடு
நானிலந் தனில்வளர் வுறும்
ஞானமணி அன்புமணி சைவமணி தெய்வமணி
நன்(று) ஓம் ஒலிக்கும் மணியே!

வெல்லரிய ஐம்புலனை வென்றுநின் னடிபெற
விழைந்துநின் சட்ட முறையை
மெய்யன் புடன்பேணி 'யாவும் நின் செயல்' என
*விளம்பி, 'நீயே துணை' எனச்

செல்லும்அடி யார்வாழ்க்கை யைக்கொண்டு செல்லல்
சிறுதேர் உருட்டி யருளே! [போல்
திருவிருடி நகர்பொலிய வருபரம குருநாத!
சிறுதேர் உருட்டி யருளே. 2

---

[1]மயல்—மயக்கம். [2]உயல் அறிகிலேன்—உய்யும் வழியை அறியாதிருக்கின்றேன். *விளம்பி—சொல்லி.

93. முன்பொரு வருங்கண் டிலாததிரு வருள் நெறியை
மூதுலகி னிற்ப ரப்ப
முழுதும்அழ கியவடிவொ(டு) அவதார மாகிவரு
மூலமறை யின்சொ ருபமே!
நின்*பதாம் புயமலர் வழுத்துமெய் யடியார்கள்
நினைவெலாம் பூர்த்தி செய்து,
நிட்டைநிலை காட்டி, அருளனுபவமும் நிறைவித்து,
நிகரில்பே ரின்பம் உதவிப்
புன்பவம் ஒழித்தருள்செய் பூரணப் பொருளே!
புலன் பொறி கடந்த பொருளே!
புண்ணியம் செய்திட்ட புண்ணியப் பயனாய்ப்
பொலிந்திலங் கும்புனித னே!
தென்பொதிகை யிற்றவச் செம்பயிர் விளைக்குமுநி!
சிறுதேர் உருட்டி யருளே!
திருவிருடி நகர் உயர வருபரம குருநாத!
சிறுதேர் உருட்டி யருளே. 3

94. பெய்யுமழை முகில்நிகர் பெருங்கருணை உடையவ!
[2]பிராரத்துவம், [1]சஞ்சிதம்,
பிறகுசேர் [3]ஆகாமி யம்மூன்றும் வேகப்
[4]பிறங்குமெய்ஞ் ஞான அனலே!
வையும்உல கத்தரையும் வாழவைக் கும்தெய்வ
வள்ளலே! வளம் அனைத்தும்
வழங்கும்உயர் வள்ளலே! அன்பருளும் வள்ளலே!
மகிழ்வுமிக அருள்வள் ளலே!
உய்யும்வழி ஒன்றுண்(டு) எனச்சட்ட நெறியைஇவ்
வுலகினுக் கருள்வள் ளலே!
ஒப்புயர் விலாஞான வள்ளலே! மோனவான்
ஒளிரும்அற் புதவள்ளலே!
செய்யும்உயர் செயல்களின் பயனான வள்ளலே!
சிறுதேர் உருட்டி யருளே!
திருவிருடி நகர்வளர வருபரம குருநாத
சிறுதேர் உருட்டி யருளே. 4

---

*பதாம்புயம்—திருவடித்தாமரை.
[1]சஞ்சிதம்—பல பிறவிகளாகச் சேர்ந்து குவிந்துள்ள முன் வினை. [2]பிராரப்தம்—இப்பிறப்பில் அனுபவிப்பதற்கென வந்துள்ள வினை. [3]ஆகாமியம்—இப்போது புதிதாகச் சேரும் வினை. [4]பிறங்கும்—பிரகாசிக்கும்.

95. நந்திமுத லாம்கணத் தலைவர்களும் அமரர்களும்
நாரதர் அகத்தியர் முதல்
நாற்பத் தொடே எணு யிரமுநிவர் கூட்டமும்
நாகலோ கத்தவர் களும்

அந்திநிறம் ஆலாலம் உண்டகண் டம்கொண்ட
அண்ணலும் உமாதேவியும்
அயனும்மா தவனும்எண் திசைகளின் பாலகரும்
ஆதவன் திங்கள் செவ்வாய்

புந்திமுத லாம்நவக் கோள்களும் வசுக்களும்
போற்றிப் புகழ்ந்து மகிழப்
பொற்சபையில் நடனமிடு பரிபூர ணக்கடவுள்
புகலும் ஓங்கார உருவன்

*செந்திருவின் நாமகளின் மருகன்அரு ளெனும்உருவ
சிறுதேர் உருட்டி யருளே!
திருவிருடி நகர்மிளிர வருபரம குருநாத!
சிறுதேர் உருட்டி யருளே. 5

96. அங்கைகொடு மலர்தூவி அன்பினுல் அர்ச்சிக்கும்
அடியார்க ளின்துணை வனே
அகம் உருகி அழுதுதொழு(து) இனிதுவழி பாடு
அன்பர்உளம் அமர் இறைவனே [செயும்

கங்கையினை நாள்தோறும் அதிகாலை வேளையிற்
காசினி யெலாம்காட் டிடும்
கருணைநிறை வள்ளலே! கமழும்மண மலர்செறி
கவின்பதாம் புயவள் ளலே!

†சங்கையெல் லாமும்அற அருள்விளக் கம்கூறு
சாந்தவடி வாம்வள் ளலே
தவம்தயவு சன்மார்க்கம் ஆதிஇவை இனிதே
தழைக்கின்ற உள்ளம் உடையோர்

செங்கைபற் றிச்செம்மை நெறியழைத் தேகுபவ!
சிறுதேர் உருட்டி யருளே!
திருவிருடி நகர்ஒளிர வருபரம குருநாத!
சிறுதேர் உருட்டி யருளே. 6

---

* செந்திருவின் நாமகளின் மருகன்—ஓர் அவதார சமயத்தில் லக்ஷ்மியின் 12 புத்ரிகளை மணந்தவரும், மற்றோர் அவதார சமயத்தில் ஸரஸ்வதியின் புத்ரிகளான சித்தி, புத்தி எனும் இருவரையும் மணந்தவருமான விநாயகப் பெருமான்.

† சங்கை—அச்சம், சந்தேகம்.

97. நிகழ்ந்திடும் செயல் பலவும் நின்செயல் எனக்கருதி
நேயம் நின் பாத மலரில்
நெகிழாது வைத்துநன் முத்திநலம் எய்திட
நினைந்(து) அகந் தைக்கி மூங்கை

* அகழ்ந்தெடுக்கும் தூய அடியார்கள் திருவுள்ள
மாம்பெருங் கோயில் நடுவில்
அற்புதச் சோதிவடி வாய் ஓங்கும் அண்ணலே !
அமரர்களும் முநிவரர்களும்

புகழ்ந்துபோற் றும்தூய முத்தர்புகழ் தலைவனே
புதுமையும் பழமையும் அமை
புனிதநெறி ஒன்று கண்(டு) உலகினுக்(கு)
போத ! பற்பல மணமலர் [இனிதுதவு

திகழ்ந்திலகு பாதனே ! மிகுசாந்த சீலனே !
சிறுதேர் உருட்டி யருளே !
திருவிருடி நகர்பெருக வருபரம குருநாத !
சிறுதேர் உருட்டி யருளே. 7

98. அருவம்என ஒவ்வோர் அணுப்பகுதி யுள்ளும்நிறை
ஆனந்த மான பரமே !
அங்கங்கும் அற்புதம் விளைக்கின்ற தூயபர
மான்மாநு பவ சொருபமே !

புருவமொர் இரண்டின் நடுவில் திருவிளக்கெனப்
பொலிகின்ற ஜோதி மயமே !
பொறிபுலன் அனைத்துக்கும் எட்டாமெய் இன்பம்
புகட்டியருள் போதாந்தமே !

உருவமுடை அண்டங்கள் அத்தனைக் கும்கருணை
ஒளியருளி இன்பம் அருளி
ஓங்கார நாதத்தி னுல்உண்மை யன்பருளி
உயர்வெலாம் நல்கி யருளித்

திருவுளத் தின்வண்ணம் இனிதே இயக்கல்போல்
சிறுதேர் உருட்டி யருளே !
திருவிருடி நகர்இலக வருபரம குருநாத !
சிறுதேர் உருட்டி யருளே. 8

---

* அகழ்ந்து—தோண்டி.

[வேறு]

99. அன்றென ஆமென வேபல துறைகளில்
அறிஞர்கள் ஓதியுளார்
அவையவை யும்நலம் எனவே தோன்றிடும்
ஆயினும் உட்புகுவோர்

நன்றிது தீதிது எனஉண ராவணம்
ஞாலச் சூழ்நிலைகள்
நண்ணிடு காலையில் உண்மை விளக்கம்
நவில்வோர் எவரும் இரார் ;

"தின்றிடு மாறு(டு) உறங்கிடு மாறு
தெரிந்தனம் ; மற்றெதுவும்
தெரிகிலம்" எனவே திரிதரு மாந்தர்
திருந்தப் போந்தருளி,

'ஒன்றிறை, ஒன்றருள் நெறி' எனும் நாத !
உருட்டுக சிறுதேரே !
ஒளிர்இரு டிப்பட் டித்தவ சீல !
உருட்டுக சிறுதேரே. 9

100. வண்மை மிகுந்து விளங்கு பராபர
வருணைச் சிரமம் எலாம்
வாய்மையை உணரவும் இறையருள் எய்தவும்
வருதடை யன்(று) எனவே

திண்மை மிகும்திரு வருள்நெறி யுதவித்
தெரியா தவர்களையும்
செவ்விதின் நன்று திருத்திப் பேணிடு
சீரிய ! அருள் நூலின்

*நுண்மை யெலாம் இனி(து) ஓதிச் சத்துவ
நோன்பு குறித்தருளி
நோய்பல நீக்கப் பிறவிப் பிணியற
நுவலரு நிட்டை யினில்

உண்மை விளக்கம் உணர்த்திடும் நாத !
உருட்டுக சிறுதேரே !
ஒளிர்இரு டிப்பட் டித்தவ சீல !
உருட்டுக சிறுதேரே. 10

(இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ் முற்றும்)

---

*நுண்மை—நுட்பம்.

## சிற்ருராய்ச்சி

[எண்—பாடல் எண். 'ம' என்ற முன்னெழுத்துடைய எண்கள்—பிள்ளைத்தமிழ் மகுடம் பாடல் எண்கள், மற்றவை பிள்ளைத்தமிழ் 100 பாடல் எண்கள்.]

## இருடியர்பட்டி

அமலமானது 60. அருள் மிகுந்தது ம. 2, 1, 12, 13 அழகியது 30, 41. அன்பு மிக்கது 70. இருள் அணு கொணுதது 57. இன்பம் மிக்கது 66. உயர்வது 35. உழைப்பவர் வாழ்வது, 51 ஒளி மிக்கது 90. குறை தவிர்ப்பது 37. குண நலம் மிக்கது 38. கோதிலாதது 39. சாந்தம் மிக்கது 36. சிவலோகம் என ஒளிர்வது 85. சுகம் உதவுவது 65. செல்வம் மிக்கது 16, 17, 18. ஞானம் மிக்கது 5. தகவு அருள்வது 22. தருமம் மிக்கது 33. தானம் மிக்கது 34. திரு வளர்வது 19, 82. தெய்விகம் மிகுந்தது 84. தேசு மிக்கது 81. தேவர் உலகென ஒளிர்வது 86. பல்வளம் மிக்கது 9, 43. பொலிவது 58. மகிழ்வருள்வது 62. மதுர மானது 59. மதுரைக்குத் தெற்கில் 50 மைலில் உள்ளது 7. மலர் செறிவது 46. மாசிலாதது 44. முத்தமிழ் முழங்குவது 45, 47. முழவு அதிர்வது 89. வளம் மிக்கது 24. விழா உடையது 32. விளைபொருள்கள் 92.

## கணபதி

அவ்வைக்கு, நாரையூர் நம்பிக்கு, கபிலர்க்கு அருளிய வன் 8. ஏகசொரூபன் ம. 5. ஓமெனும் உருவன் ம. 1, 10. கயமுகக் கடவுள் 3. சிவன் தேர் அச்சொடித்தவன் 9, 25. சித்தி, புத்தி கணவன் 6, 10. செந்திருவின் மருகன் 95. திருமாலின் 12 புத்ரிகளை மணந்தவன் 7. நாமகளின் மருகன் 95. பரிபூரணன் 6, 10, 15, 31. பரிபூரணன் நடனம் 36, 95. மதுரைநகர் நாயகன் 10. மழகளிறு முகன் 20. முக்கண் ஐங்கர முன்னேன் 4. முதற் கடவுள் 4. மூவரை அருள் வோன் 36. மேருவில் மறைவரைந்தோன் 1. மோதக பாணி

## குருநாதர்

## சட்ட நெறி



## சட்டம்



## மற்றும் பல விஷயங்கள்



---

# இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ் & பிள்ளைத்தமிழ் மகுடம்

## பாடல் முதற்குறிப்பகராதி

(ம—பிள்ளைத்தமிழ் மகுடம்)



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்



பரம ஏழைகளும் பக்குவம் பெற அருள்ஞானச் சட்டத்தை இவ்வுலகிற்கு அருளிய குருபரம் பொருளின் திருவருள் பெருமையை இவ்வுலகில் பரப்புவான் வேண்டி, அக்குரு அருளாலே இப் பதிப்பகம் அண்மையில், சென்னை மாநகரில் 16—5—1971ல் துவக்கப் பெற்றது. இப்பதிப்பகத்தின் நோக்கம், உலகிலுள்ள எல்லா மக்களும் அருட்சட்ட நெறி நின்று, அருளாட்சி வழி நடந்து, சாதி, சமய, மத பேதமற்று, எங்கும் நின்று இலங்கும் இறை இன்பத்தை யடைந்து உய்வதுவேயாம். மேலும் விரிவுகள் பெற விழைவோர் கீழ்க்கண்ட முகவரி யுடன் தொடர்பு கொள்ளவும்.


ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்

அடியார்கள் இல்லம் : தொலைபேசி எண் : 34600
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.


SUPER POWER PRESS, MADRAS-1